உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 11 | குரோதனஹு ஆவணிமீ கஉ | பகுதி 2
1925ஹு ஆகஸ்டுமீ 16உ

## கடவுள் வணக்கம்.

அந்தகா ரத்தையோ ரகமாக்கி மின்போலெ
னறிவைச் சுருக்கினவரா
ரவ்வறிவு தானுமே பற்றினது பற்று
யழுந்தவுந் தலைமீதிலே
சொந்தமா யெழுதப் படித்ததார் மெய்ஞ்ஞான
சுகநிஷ்டை சேராமலே
சோற்றுத் துருத்தியைச் சதமெனவு முண்டுண்டு
தூங்கவைத் தவரார்கொலோ
தந்தைதாய் முதலான வகிலப்ர பஞ்சந்
தனைத்தந்த தெனதாசையோ
தன்னையே நோவனோ பிறரையே நோவனோ
தற்கால மதைநோவனோ
பந்தமா னதுதந்த வினையையே நோவனோ
பரமார்த்த மேதுமறியேன்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே. (1)

பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளைப்
பெறுப்பேதை யறிவாளோ பேரா னந்த
முற்றவர்க்கே கண்ணீர்கம் பலையுண் டாகு
முறாதவரே கன்னெஞ்ச முடைய ராவார். (2)

ஆவாவென் றழுதுதொழுங் கைய ராகி
யப்பனே யானந்த வடிக ளேநீ
வாவாவென் றவர்க்கருளுங் கருணை யெந்தாய்
வன்னெஞ்சர்க் கிரங்குவதெவ் வாறு நீயே. (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. இறைவன் ஜீவான்மாவிடம் அந்தரியாமியாயிருந்து அவரவர் கன்மத்திற் கேற்றபடி இச்சையாதி செலுத்தி, ஞானேந்திரியங்களினாலே விஷயங்களைப் பற்றுவித்தும், கன்மேந்திரியங்களினாலே தொழில்களைச் செய்வித்தும் வருதலின். மெய்யுணர்ந்தார், மனம், வாக்கு, காயங்களால் ஜீவான்மா இவ்வுலகத்தின்கண் புரியும் நல்வினை தீவினைகளெல்லாம் அவ் விறைவன தாணையே என்றுணர்ந்து, அவற்றில் விருப்பு வெறுப்பின்றி, சமநோக்க முற்றிருப்பர். இது பாடியவரும் அக் கருத்தினராதலின் எல் லாம் இறைவனது செயலே என்றுரைக்சலாயினர். இவ்வுணர்ச்சி இறைவ னருட்பே றெய்தாதார்க்கு எய்துவதின்றாம்.

"நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே"

என்று சிவஞானபோதம் சொல்லுகிறபடி உயிர்க்கு அறியாமை அல்லது அஞ்ஞானம் அநாதியே உளது. ஆகவே 'அந்தகாரத்தையோ........... சுருக்கினவரார்?' என்றனர்.

அந்தகாரம்=இருள்; அதாவது அவிச்சை, அல்லது அஞ்ஞானம்.

இங்கு
" பேதைமை என்னும் வித்திற் பிறந்துபின் வினைக ளென்னும்
வேதனை மரங்கள் நாறி வேட்கைவேர் வீழ்த்தி முற்றிக்
காதலும் களிப்பு மென்னுங் கவடுவிட் டவலம் பூத்து
மாதுய ரிடும்பை காய்த்து மரணமே கனிந்து நிற்கும் "

என்னும் சிந்தாமணிச் செய்யுள் கவனித்தற்குரியது.

ஆன்மாவின் அறிவு படிகம்போன்று சார்ந்ததன்பாலாகும் இயல்பினை யுடையது. அவ்வாறாம்படியதனைச் செயற்கைப் படுத்தினர் ஒருவருமில்லை யென்பார், 'அவ்வறிவுதானுமே.........படித்ததார்' என்றார்.

பற்றினது பற்றாய்=பிடித்ததையே ஆதாரமாகக் கொண்டு.

படித்ததார்=கற்றதார்?

பேரின்ப நிலையை அடைவதற்குக் கருவியான நிஷ்டையைக் கூடா மல் இந்த உடலின் நிமித்தமாகவே யுழைத்து வாழ்நாள் கழித்தல் மிகவும் தவறென்பார், 'மெய்ஞ்ஞான சுகநிஷ்டை.........அங்கவைத்தவரார்' என் றார்.

மெய்ஞ்ஞான சுகநிஷ்டை=உண்மையான ஞானானந்தங்களுக் கேதுவா கிய நிஷ்டை.

சோற்றுத்துருத்தி=சோற்றை யடைத்துவைக்கும் துருத்திபோன்ற சரீ ரம்.

சதம்=நிலை.

'தந்தைதாய் முதலான வகிலப்ரபஞ்சந் தனைத்தந்தது எனதாசையோ' என்றதனால் பிறப்பைக் குறிப்பாலறிவித்து அப்பிறப்பினைக் கூட்டிவைத் தது ஆசையே என்றார்.

"அவாவென்ப தெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து"—

என்று உத்தரவேதங் கூறுகின்றது.

காலம், வினை முதலியவை பிரவாக அனாதியாய் வந்துகொண்டிருத்தலின் எதனையும் நோதற்கு இடமில்லை யென்பார், 'தன்னையே நோவனோ .........வினையையே நோவனோ' என்றார்.

பந்தம்=பிறவியாகிய விலங்கு.

வினை=பூர்வகன்மம்.

பரமார்த்தம்=மேலான அர்த்தம் (பொருள்.)

2. பிள்ளைப் பெற்றவட்குப் பெறுதற் கேதுவாயிருந்த காரியானுபவம் நினைக்குந்தோறும் தோன்றும். அதுபோல் சிவானந்தம் பெற்றவர்க்கு அந்த ஆனந்தம் உண்டாவதற்கு ஏதுவாயிருந்த சிவானுபவம் தோன்றும்.

பிள்ளைப் பேற்றின் உண்மை, மலடியறியாதவாறு போலக் கல்நெஞ்சம் உடையார் சிவானுபவப் பேற்றையுணரார். "அகத்தினழகு முகத்தில் விளங்கும்" என்னும் பழமொழிப்படி மனநெகிழ்ச்சி உண்டாயின் முகத்தினிடத்தே கண்ணீர் முதலியவை உண்டாம். கல்லைப்போன்ற நெஞ்சினர்க்கு அங்ஙனம் யாதொன்றும் உண்டாகாது

கம்பலை=நடுக்கம்.

உளுதவர்=அடையாதவர்.

3. "அழுதா லுன்னைப் பெறலாமோ" என்ற திருவாசகத்தின்படி 'ஆ ஆ வென்றழுது தொழுங்கையராகி' என்றும், "வஞ்சர் நெஞ்சினில் நில்லானை" என்ற தேவாரத்தின்படி 'வன்னெஞ்சர்க் கிரங்குவது எவ்வாறு நீயே' என்றும் கூறினர்.

கையர்=கரங்களை யுடையவர்.

அடிகள்=சுவாமி.

வன்னெஞ்சர்=கடின மனதுடையவர்.

---

# ஆனந்தபோதினி

குரோதனஞ ஆவணிமீ கஉ

## வணக்க முறை.

உத்தம செயல்களிலேயே ஊக்க முற்றுள்ள நமது பாத கண்டத்தில் வணக்க முறையானது தொன்று தொட்டு ஒழுங்குபெறக் கையாளப் பெற்றுவரும் விஷயம் யாவரும் அறிந்ததொன்றும். வணக்கமுறை யென்பது கடவுளிடத்தும் பெரியவர்களிடத்தும் நாம் பயபக்தி விசுவாசத்துடன மனம வாக்கு காயங்களென்னும்

திரிகாண சுத்தியாய் நடந்துகொள்ள வேண்டிய ஒழுக்கத்தைத் தெரிவிக்கும் பத்ததியாம்.

இம்முறை மனவொடுக்கத்தை நாளடைவில் உண்டுபண்ணத் தக்கது. "கெடுக்கவல்லதும் கெட்டவர் தங்களை, எடுக்கவல்லதும்" மனமே யல்லவா? அந்த மனம்போகும் போக்கில் நாம் போகாத படி, நாம் போகவேண்டிய போக்கில் அதை நிறுத்த வேண்டியதே நமது கடமை. இக்கடமைக்கு வணக்கமுறைதான் ஆதாரமானது. ஆகையால் அவ்வணக்கமுறையை நாம் ஒருபோதும் கைநழுவவிடக் கூடாது.

தேவாலயத்திற்குத் தெய்வ வணக்கஞ் செய்யச் செல்லும் போது நாம் அனுசரிக்க வேண்டிய முறையைச் சிறிது கவனிப் போம்: கோயிலுக்குப் போகுமுன் ஸ்நானம் செய்யவேண்டும்; ஸ்நானம் செய்ததும் தோய்த்து உலரவைத்த வேஷ்டியை உடுத் துக்கொண்டு சந்தியாவந்தனஞ் செய்தல் வேண்டும். பிறகு தேங் காய், பழம், தாம்பூலம், கற்பூரம், புஷ்பம் முதலியவைகளைத் தட்டி லேந்திக்கொண்டு பாதசாரியாகத் தேவாலயத்திற்குச் செல்லவேண் டும். ஆலயத்தை நெருங்கினவுடன் அங்கிருக்கும் தீர்த்தத்தில் கை கால்களைச் சுத்தப்படுத்தி ஆசமனம் புரிந்து கோபுரதரிசனஞ்செய்ய வேண்டும். பிறகு தேவநாம ஸ்மரணையுடன் ஆலயத்தினுட் புக வேண்டும். புகுந்ததும் பலிபீடம் துஜஸ்தம்பம் ஆகிய இவற்றைக் கைகூப்பித் தொழவேண்டும். அப்பால் சிவாலயமானால் ரிஷபதேவ ரையும், விஷ்ணு ஆலயமானால் பெரிய திருவடிகளையும் நமஸ்கரித்து உள்ளே செல்வதற்கு ஆஞ்ஞைபெற்று, அபிஷேக நிவேதனசமயம் அல்லாத சமயத்தில் திருச்சந்நிதிக்குமுன் ஆண்மக்கள் அஷ்டாங்க நமஸ்காரமும், பெண்மக்கள் பஞ்சாங்க நமஸ்காரமும், மூன்று, அல் லது ஐந்து, அல்லது ஏழு, ஒன்பது, பனிரண்டு முறை செய்தல் வேண்டும். அதன்பின் சந்நிதானத்தினுட்புகுந்து, துவாரபாலகரை வணங்கி அவரனுமதிகொண்டு சந்நிதானமடைந்து ஆங்குள்ள அர்ச் சகரிடம் தாம் கொண்டுபோன நிவேதனப் பொருள்களைக் கொடு த்து, அவர் தேவாராதனை செய்ய நாம் கடவுளைத் தரிசித்து, தெய் வத்திற்கு நமதுபுறத்தைக் காட்டாமல் திரும்பவேண்டும்; திரும்பிக் கரங்களைக்குவித்து மந்திரோச்சாரண ஸ்தோத்திரங்களைச் செய்து கொண்டு மூன்று முதல் இருபத்தொன்று வரை ஒற்றையாகக் கட வுளைப் பிரதக்ஷணங்கள் செய்யவேண்டும். அவ்விதமே தேவியார்

சந்நிதியுட் புகுந்து நான்குமுறை நமஸ்காரஞ்செய்து அம்மையைத் தரிசித்துப் பிரதக்ஷணஞ் செய்துகொண்டு வீட்டிற்குத் திரும்பல் வேண்டும்.

ஆலயத்துள் ஆசாரமில்லாமல் போதல் கூடாது. மலம், சலம், எச்சில் இவற்றை விமோசனஞ் செய்யலாகாது. மூக்குச் சிந்தல், தாம்பூலம் தரித்தல், பலகாராதி சாப்பிடல், சயனங் கொள்ளுதல், ஆசனத்திருத்தல், காலை நீட்டிக்கொண் டிருத்தல், மயிர்முடித்தல், சிரசிலும், தோளிலும் வஸ்திரம் தரித்துச் செல்லுதல், நிர்மாலி யத்தை மிதித்தல், கடத்தல், ஸ்தூபி, துவஜஸ்தம்பம், விக்கிரகங் களின் நிழல் இவற்றை மிதித்தல், தாண்டுதல், வீண்வார்த்தை பேசுதல், சிரித்தல், விளையாடல், சுவாமிக்கும் பலிபீடத்திற்கும் நடுவே குறுக்கிடல், ஒருமுறை இருமுறை சுவாமியை வலம்வரல், அகால தரிசனஞ்செய்தல், அபிஷேக நிவேதன காலங்களில் தரி சித்தல், சுவாமி வீதியுற்சவம் கொண்டருளும் போது கோயிலுட் புகுந்து தெய்வத்தை வணங்குதல் ஆகிய இவை கூடாவாம். ஆல யத்தில் வாசலில்லா வழியால் நுழைந்துபோதல் தகாது. கறுப்புக் கம்பளிப் போர்வையுடன் செல்லுதலும் குற்றம். வெளிச்சமில்லா இடத்தில் மலர்மாலை தொடுத்தலும் உதவாது. பகவானுடைய சொத்துக்களை நம்பொருட்டு உபயோகப் படுத்திக் கொள்ளுதலும் தவறு. இவ்வாறு சிவாலயதரிசனவிதி, பிரபன்னபாரிஜாதம் கூறுவ தைக் கவனித்து வணக்கமுறையைக் கைப்பற்ற வேண்டும்.

தேகாரோக்கியத்திற்கும் இவ்வணக்கமுறை நல்ல மருந்தாகும். இதனை நமது நாடு கையாளுவதுபோல் வேறெந்த நாடும் அத்து ணைச் சிறப்பாகக் கையாளவில்லை. மகம்மதியரும் தமது பள்ளிவாச லுக்குப் போனதும், பாதரட்சையை வெளியில் கழற்றிவிட்டு உள் ளேசென்று அங்குள்ள தீர்த்தத்தில் கைகால் முதலியவற்றைச் சுத் திசெய்துகொண்டு வணக்கஸ்தானத்தின் முன் முழங்காலிட்டு நெற் றித்தலம் தரையிற் பொருந்தக்குனிந்து வணங்கும் நல்ல பழக் கத்தை மேற்கொண் டிருக்கின்றனர். இவர்கள் வணக்கமும் சிறந் ததே. இப்படி வணங்குவதால் இராஜஸ தாமஸ குணங்கள் நசித்து சத்துவகுணந் தலையெடுக்கின்றது. அது நன்மைகள் பலவற்றிற்கும் அனுகூலமாகின்றது.

மேல் நாட்டாரின் வணக்கமுறையோ இராஜஸ குணத்தோடு கூடியது. அவர் உடுத்தவுடுப்புடனும் பாதரட்சையுடனும் இருந்த

படியே ஒற்றைக்கையை நெற்றித் தலத்தில் பட்டதும் படாததுமாகக்காட்டி வணங்குகின்றனர். அவர்களுடன் பழகிய நம்மவரிற் பலர் நம் பூர்வீகரின் கொள்கையை அறவே விடுத்து மேல்நாட்டாரைப்போலவே வணங்கும் முறையைத் தழுவி வருகின்றனர். இதனால் இவர்களுக்கு மனவொடுக்க முண்டாவது அரிதாகின்றது. மனவொடுக்க மேற்படாதபோது சாந்தம், தயை முதலிய நற்குணங்கள் பிரகாசிக்க இடமில்லாமற்போகின்றது. ஆகையால் இப்பழக்கத்தை விட்டு நமது முன்னோர் அனுசரித்துவந்த முறையையே நம்மவரனைவரும் கையாண்டுவந்து நம்தேச முன்னேற்றத்தை அபிவிர்த்தி செய்ய எல்லாம் வல்ல இறைவன் முன்னின்று கடாக்ஷித் தருளுவானாக. சுபம். ஓம் தத் ஸத்.

---

## நட்பு.

**அறிஞர்காள்!** நட்பு, என்பது தொழிற்பெயரும் பண்புப் பெயருமாம். இது "நள்" என்னும் பகுதியும் "பு" என்னும் விகுதியும் ஒன்றி "ளள வேற்றுமையில் றடவு மல்வழி யவற்றோடுறழ்வு" மெனும் நன், மெய். 24 சூத்திரவிதியின் படி நிலைமொழி யீற்று ளகரமெய் வல்லின விகுதிபுணர டகரமெய்யாகத் திரிந்து "நட்பு" என நின்றது.

நட்பு, என்னுமிச்சொல் சிநேகம் என்பதைப் பயக்கும். இந் நட்பு, இயற்கை செயற்கையென விருபாற்றினை யுடைத்து. என்னை? இயற்கையாகவே யன்புடையராகிய சுற்றத்தாரைக் குறிக்கும் பண்பாகு பெயராதலும், நட்பியற்றும் எத்திறத்தவர்க்கும் பொதுவாக நின்றுதொழிலாகு பெயராக நிற்றலுமாம். இயற்கை நட்புச் சுற்றமே யென்பது வில்லி பாரதம் வாரணாவதச் சருக்கம் 44 செய்யுள்.

"மன்னன் யானீமுனிவன் மரபா லெனக்குமுனக்கு
மென்ன நண்புண்டு"

என்றதினாலேயே சுற்றத்தவரை நட்பெனக் கூறுதலும் வழக்காறுள்ளதென்ப தினிது விளங்கும். இவ்வா றியற்கையாகவே நட்புடைய "சுற்றத்தார் சுற்றப் படவொழுகல் செல்வந்தான், பெற்றத்தாற் பெற்ற பயன்" என்று நாயனாரருளியுள்ளபடி தன் கிளைஞருடன்கூடி "அன்போடியைந்த வழக்கென்ப வாருயிர்க் கென்போ டியைந்த தொடர்பு" எனக் கூறியவாறமைந்து,

"கடுக்கெனச் சொல்வற்றாங் கண்ணோட்ட மின்றா
மிடுக்கண் பிறர்மாட் டுவக்கு—மடுத்தடுத்து
வேக முடைத்தாம் விறன்மலை நன்னாட
வேகுமா மெள்ளுமாங் கீழ்"

எனச் சான்றோரருளி யுள்ளபடி சுற்றத்தாருடன் கடுமையாகப் பேச

தல், எவரிடத்துந் தாக்ஷண்யம் பாராமை, தன்னுறவினர்கட்கே நேரிடுகிற துன்பத்தைக் காண்புழி மகிழ்தல், காரணமின்றி மேன்மேலுஞ் சினங் கொண்டு "நம்மாலேயாவரிந் நல்கூர்ந்தா ரெஞ்ஞான்றுந் தம்மாலாமாக்க மிலரென்று" செல்வச் செருக்கடைதல், பிறரைத் தூஷித்தல் முதலிய கீழ்மைக் குணங்க ளனைத்தையு மகற்றி,

"அற்ற குளத்தி னறுநீர்ப் பறவைபோ
லுற்றுழித் தீர்வா ருறவல்லர்—அக்குளத்திற்
கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே
யொட்டி யுறுவா ருறவு."

என வான்றோர் கூறியுள்ளபடி ஆபத்து வந்தகாலத்திலும் உடனிருந்து வாழுமவர்களே நற்சுற்ற மாவார்கள். நாலடியிலும்,

"அழன் மண்டுபோழ்தி னடைந்தவர்கட் கெல்லா
நிழன்மரம்போ னேரொப்பத் தாங்கிப்—பழுமரம்போற்
பல்லார் பயன்றுய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன்."

எனக்கூறிய வித்தகைய இயற்கை நட்பமைந்த சுற்றத்தா ரெஞ்ஞான்றுந்தம்மை விட்டகலாது "உழைப் பிரிந்து காரணத்தின் வந்தானைவேந்த னிழைத்திருந் தெண்ணிக் கொளல்" என்பதில்

பிரிந்து பின்பொரு காரணத்தால் வந்தடைந்தவனையுந் தன் தமரெனக் கொள்ளுதலே கடமையென்றா ராகலான், சுற்றமியற்றிய குற்றம் விடுத்து அவர்களை மனம்போன போக்கே யகலவிடாது தம்முன்னடக்கி ஒற்றுமைப்பட வாழ்வதுவே இயற்கைநட்பாம். வில்லிபுத்தூராருங் கிருட்டினன் தூதுச் சருக்கத்தில்—

"குருகுலத்தோர் போரேறே குற்றமது பார்க்குங்காற் சுற்றமுண்டோ
வொருகுலத்திற்பிறந்தார்களுடன்வாழும் வாழ்வினைப்போலுறுதியுண்டோ
விருவருக்கும் வசையன்றோ விருநிலங்காரணமாக வெதிர்ப்பதென்றான்"

எனக் கூறியுள்ளது முய்த்துணர்க.

அன்பர்காள்! இதுகாறு மியம்பிய நட்பின் முன்னையதை விடுத்துப் பின்னையதாகியசெயற்கையாலாகும் நட்பின்றன்மையை யாராயப்புகுவாம். செயற்கை நட்பாவது "உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கேயிடுக் கண்களைவதா நட்பு" என்றபடி யிம்மாண்பினை யுடையாரினது இணக்க மறிந்தே யிணங்குவ ரறிவினராதலி னிது, செயற்கை நட்பெனவகுத் துரைக்கப் பெற்றது. "தெளிவிலார் நட்பிற்பகை நன்று" என நாலடியிலுங் கூறியுள்ளாராகலான் நற்குண நற்செய்கையுடைய நட்புடன் கூடிவாழுதலே நன்மைபயக்கும். அன்றேல், "ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை தான்சாந்துயரந்தரும்" என்றபடி சாதற்கேதுவான துன்பந்தருமாகலின் "குணனுங் குடிமையுங் குற்றமுங்குன்றா வினனு மறிந்துயாக்க நட்பு" என்கிறபடி குணம், குடிப்பிறப்பு முதலியவைகளை

யிணங்குதற்கு முன்னரே யறிந்து கோடல் வேண்டு மென்றார் நாயனாரும். " கூடிப்பிரியேல் " என ஒளவைப் பிராட்டி யருளியுள்ளபடி சேர்ந்து விடுதல் சிறப்பல்ல வாகையால் நட்கப்படாதவரின் தன்மை யறிந்தகற்ற நல்லாதனார்,

" பொய்வழங்கி வாழும் பொறியவரையுங் கைதிரிந்து
தாழ்விடத்து நேர்கருதுந் தட்டையும்—ஊழினால்
ஒட்டி வினைநலம் பார்ப்பானு மிம்மூன்றும்
நட்கப் படா அதவர் "

எனத் திரிகடுகத்தில் சாற்றியுள்ளார். நாலடியிலும்,

" உள்ளத்தா னள்ளா துறுதித் தொழிலராய்க்
கள்ளத்தா னட்டார் கழிகேண்மை—தெள்ளிப்
புனற்செதும்பு நின்றலைக்கும் பூங்குன்ற நாட
மனத்துக்கண் மாசாய் விடும் "

எனக்கூறி யுள்ளது மீண்டறிதற் பாலது. தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரும் " உள்ளற்கவுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க வல்லற்க ணாற்றறுப்பார்" (அதாவது) துன்பத்திற் கைவிடுவோனினது நட்பையொழித்து, " நுண்ணுணர்வினுரொடு நுகர்வுடைமை விண்ணுலகேயொக்கும்" என்றபடி நற்குண நற்செய்கை வாய்ந்த நட்பினையறிந்து, சக்கிரவர்த்தி திருமகனார் குகனை நோக்கி ' யாதினுமினிய நண்ப ! யிருத்தி யீண்டெம்மொடு" எனக்கூறியதனையே கொண்டு, பிதுர்வாக்கிய பரிபாலனத்தின் பொருட்டுக் கானகத்திற் சென்றதமையனை ஸ்ரீ ராமபிரானைத் தேடிச்சென்று சிருங்கிபேரபுரத்திற் கருகிலுள்ள கங்காநதி தீரத்தில் பரதன் வந்து சேர்ந்தமை யறிந்து, தமையனரசுரிமையைக் கவர்ந்து கொண்டின்னமு மிவண் எய்தியதெதற்கோவென மிக்க சினங்கொண்டு,

" அஞ்சன வண்ணனென் னுருயிர் நாயக னாளாமே
வஞ்சனை யாலர செய்திய மன்னரும் வந்தாரே
செஞ்சர மென்பன தீயுமிழ் கின்றன செல்லாவோ
வுஞ்சிவர் போய்விடின் நாய்குக னென்றெனையோதாரோ "

" ஆழ நெடுந்திரை யாறு கடந்திவர் போவாரோ
வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ
தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ
ஏழைமை வேட னிறந்தில னென்றெனை யேசாரோ."

" முன்னவ னென்று நினைந்திலன் மொய்புலி யன்னானோர்
பின்னவ னின்றன னென்றில னன்னவை பேசானேல்
என்னிவ னென்னை யிகழ்ந்ததிவ் வெல்லைகடந்தன்றோ
மன்னவர் நெஞ்சினில் வேடர் விடுஞ்சரம்வாயாவோ "

" பாவமும் நின்ற பெரும்பழி யும்பகை நண்போடும்
ஏவமு மென்பவை மண்ணுல காள்பவ ரெண்ணுரோ
ஆவது போகஎன் ஞருயிர்த் தோழமை தந்தான்மேல்
போவது சேனையும் ஆருயி ருங்கொடு போயன்றோ "

" அருந்தவ மென்துணை யாள விவன்புவி யாள்வானே
மருந்தெனி னன்றுயிர் வண்புகழ் கொண்டுபின்மாயேனே
பொருந்திய கேண்மையு கந்தவர் தம்மொடு போகாதே
இருந்தது நன்று கழிக்குவ னென்கட னின்றோடே. "

என்று நட்பிற்குற்றது தனதென்று நினைந்து உயிரிழப்பினுந்தம் மித்திரற்கிகல் கருதிய விவரோடு போர்புரிதலே நன்றெனத் துணிந்த ஸ்ரீ இராமபிரானினது செயற்கை நட்பினனாகிய குகனினது ஆற்றலையொப் பானே நட்பாகக் கொள்ளுதலே சிறப்புடைத்தாம். இதனை விரிக்கிற் பெருகும். விபுதர்காள் ! எனது சிற்றறிவிற் கெட்டியவாறு சங்கிரகமாக வெடுத் துரைத்த விதனுட்டோன்றிய குற்றங்களைந்து குணங் கொள்ளுவீரென வேண்டுகின்றனன்.

R. V. ஸ்ரீநிவாஸராகவன், புத்தாநத்தம்.

குறிப்பு:—நட்பின் விஷயமாக நமது பத்திரிகையின் 14834-வது சந் தாதாரராகிய நண்பர் S. நரஸிம்மம் (25, மலைக்கோட்டை கீழ்வீதி, திரி சிரபுரம்) என்பவரும் விரிவாக எழுதியுள்ளார். கருத்து ஒன்றாகவே முடிவு பெறுகின்றது. மற்றொருமுறை இடங்கிடைத்தபோது அதனையும் வெளி யிடுவாம்.

சுக்கிரீவனுக்கும் விபீஷணனுக்கும் நேர்ந்த நட்பைப்போன்ற நட்பே உத்தமமானது.

" தொல்லருங் கால மெல்லாம் பழகினுந் தூயரல்லார்
புல்லலர் உள்ளந் தூயார் புல்குவர் எதிர்ந்த ஞான்றே
ஒல்லைவந் துணர்வு முற்றி யிருவரும் ஒருநா ளுற்ற
எல்லியும் பகலும் போலத் தழுவின ரெழுவுத் தோளார் "

என்று இராமாவதாரங் கூறுகின்றது.

உத்தமர்க்குக் கூடுதலும், பழகுதலும் வேண்டாமலே சந்தித்த அக்க ணமே நட்புப் பாராட்டுந்தன்மை யுண்டாம். அந்த நட்பு ஒருநாளுக் கேற் பட்ட இரவும் பகலும்போல மாறாதிருப்ப தொன்றும். இங்கே பகல் அறத் தையும், இரவு இன்பத்தையும் உணர்த்தும். அறமும் அதன்பயனாகிய இன் பமும் எப்படி மாறுபடுவதில்லையோ அப்படி நல்லோர் நேசம் நீடித்திருப்ப தாம். (நிறத்தில் சுக்கிரீவன் வெண்மையும், விபீஷணன் கருமையும் பெற்றி ருத்தலின் இவ்வாறு உவமிக்கப்பட்டது.)

---

## நவீன நாகரீக மென்னும் பாதாளத்துக்குப் போகும் படிகள்.

(37-ம் பக்கத்தொடர்ச்சி.)

இரண்டாம்படி பீடி சிகரட்டு:—காப்பிக் கிளப்புக்குள் நுழைந்து வெளிவந்தவுடன் ஊக்கங்கிளம்பி பீடி, அல்லது சிகரட் ஒன்றைக் கொளுத்தி விடுவார்கள். வரவர பைசாவுக்கு ஒன்று வீதம் விற்கும் சிகரட்டைக் குடிப்பது மதிப்புக் குறைவென்று கருதி ஒன்று அரையணு பெறுமான முள்ள கத்தரிக்கோல் மார்க்கு போன்றதை உபயோகிக்கத் தலைப்பட்டு விட்டார்கள். இப்பழக்கத்தினு லுண்டாகும் தீமைகளைப்பற்றிப் பன்முறையும் நமது ஆனந்தபோதினி விளக்கி யுள்ளதாதலால் ஈண்டுக் கூறுவது அனுவசியம். சுருக்கமாய்ச் சொல்லுமிடத்து இது வேஷாக்குக்காகவே பழகும் துர்ப்பழக்கமாகும்.

மூன்றம்படி தலைமோட்டை :—பீடி சிகரட்டுப் பிடித்தவுடன் சற்று மேனாட்டு நாகரீகத்தில் பிஞ்சுவிட்டதுபோ லெண்ணம் வரவே தலையில் குடுமிவைத்திருப்பது சற்று அநாகரீகமாகத் தோன்றும். உடனே கிராப் செய்து படிப்படியாய் எண்ணெய் இடுவதைவிட்டு வாஸ்லின் தடவி உயர்ந்த தந்தச்சீப்புக்கொண்டு பெரிய கண்ணாடிமுன்நின்று கால்மணிநேரம் செலவு செய்து பலவிதமாக நெளிவும் வளைவும் பொருந்தச் சீவிச் சிங்காரித்துக் கொள்வார்கள். வாஸ்லின் வாங்கச் சக்தியில்லாதவர்கள் தண்ணீரும் எண்ணெயும் கலந்துபூசுவார்கள். இப்படிச் செய்யாவிட்டால் உரோமம் படிந்து வராது. கிராப் செய்தவுடன் சிலர் பொட்டு வைக்கவோ, மதாசாரப்படி ஏற்பட்ட நாமமோ, திருநீறோ, அணியவோ பிரியப்படார்கள். கிராப்செய்யக் கூலிதடவைக்கு 6 அணு. தவிரவும் 4 நாளைக் கொருதடவை முகச்சவரம் செய்யத் தடவைக்கு அணு 2 ஆகக்குறைந்ததுமாதம் ஒன்றுக்கு 1 ரூபாயாகும். இப்படி ஆயுளில் வாஸ்லின் வாங்கவும் க்ஷவரக்கூலி கொடுக்கவும் எவ்வளவாகிற தென்பதைச் சிந்திப்பதேயில்லை. டாக்டர் யூ ராமராவ் முதலியவைத்திய நிபுணர்கள் தலைமத்தியில் குடுமிவைத்துச்சுற்றிலும் க்ஷவரம் செய்துகொள்வதே, இந்தியாவி லுள்ளவர்களுக்கு நலம் என்று கூறியுள்ளார்கள்.

நாலாம்படி கால்சட்டை, தொப்பி, பூட்ஸ் முதலியன:—தலையில் கிராப் வைத்தவுடன் வேஷ்டி கட்டிக்கொள்வது நாகரீகக் குறைவாகத் தோன்றும். உடனே கால்சட்டையும், அதற் கேற்றாற்போல் கைச்சட்டை, வேஸ்ட்கோட், காலர், டை, தொப்பி, பூட்ஸ் முதலியனவும் அணிய ஆரம்பித்து விடுவார்கள். இவ்விதவேஷத்துக்கு சுதேசத்துணிகளையோ, அன்றி சாமான்களையோ உபயோகிப்பது அகௌரவமென்று கருதிச் சீமைத்தினுசுகளுக்கே பணத்தைக் கொட்டுகிறார்கள். சாதாரணமாய் நமக்கடுத்த அவசியமுள்ள உடுப்பை அணிந்தால் வேஷ்டி ரூ. 1-8-0, துண்டு 0-8-0, ஷர்ட்டு 2-0-0, ஆக மொத்தம் ரூ. 4 தான் ஆகும். நவீன ஆடையினால் சுமார் கால்

சட்டை ரூ. 6-0-0, கைச்சட்டை ரூ. 8-0-0 ஷர்ட்டு ரூ. 8-0-0, வேஸ்ட் கோட் ரூ. 1-8-0, காலர் 0-8-0, டை 1-4-0, கிளிப், 0-4-0, பனியன் 1-4-0, கால்சட்டையை முன்னும் பின்னும் இழுத்துக்கட்டும் தோள்வார் 2 0 0, தொப்பி 3-0-0, பூட்ஸ் 5-0-0, மேல்ஜோடு 1-8-0, ஷூஹார்ன் (Shoe horn) 0-8-0, பூட்க்ரீம் 0-8-0, இன்னும்பல ஆடம்பரச்செலவுடன் ரூ. 40 ஆகும். பின்னும் சலவை ஆபிஸில் (Laundry Office) 1 செட்டுத்துணி தோய்க்க ரூ. 2-0-0 கூட ஆகும். இது முற்றிலும் அநாவசியம். மேலும் தேகாரோக்கியத்துக்கும் குறைவேற்படும். எப்படியெனில் வஸ்திரங்களைத் தினம் குளிக்கும்போ தெல்லாம் தோய்க்கலாம். நவீன உடுப்புகளோ தோய்த்தால் சுருங்கி அழகுகெட்டுப்போகும். அதினுல் எவ்வளவு வெயர்வை, அழுக்கு இருந்தபோதிலும் அப்படியே உடுத்திக்கொள்ள வேண்டியதுதான். சரியானகாற்றும் தேகத்தில் படாது. ஆகவே 4 ரூபாய் செலவு செய்து சுகத்தையும் செல்வத்தையும் விருத்திசெய்வதை விட்டு 40 ரூபாய் கொடுத்து வியாதியையும், தரித்திரத்தையும் விலைக்குவாங்குகிறோம். இது பைத்தியமா ? புத்திசாலித்தனமா ? நிற்க நவீன ஆடையணிவோர் உடுத்த ஆரம்பித்தாலோ இவ்வளவையும் அந்தந்த இடத்தில் பொருந்தும்படி யமைக்க ½ மணிநேரம் செல்லும்; சில வேளைகளில் ரயில்கூடத் தவறிப் போவது உண்டு. பரிதாபம் !

ஐந்தாம்படி மூக்குக்கண்ணாடி, ரிஸ்ட்வாச், பட்டுக்குட்டை, பாதி மீசை.—இப்படிவேஷம் போட்டவர்களுக்குக் கண்கள் தெளிவாய்ப்பார்க்கக்கூடிய நிலைமையி லிருந்தாலும் ஷோக்குக்காகக் கண்ணாடிகளையும், நிமிஷந்தவறாமல் வேலை செய்பவர்களைப்போல் ரிஸ்ட்வாச் ஒன்றும், உள்ளூரில் வாங்குவது கவுரவமாகா தெனவெண்ணிச் சென்னை, கல்கத்தா, பம்பாய் முதலிய நகரங்களிலிருந்து வரவழைத்துப் போட்டுக் கொள்ளுவார்கள். பட்டுக்குட்டையைத்தான் இவர்கள்வேர்வையைத் துடைக்க உபயோகிப்பது. உள்ளூரில் நயமாகக் கிடைக்கக்கூடிய சாமான்களைக்கூட நகரங்களிலிருந்து இரட்டிப்பு விலைகொடுத்து வாங்கி, தபால் செலவும் செய்து பார்ஸலாக உடைப்பதை கவுரவமாக எண்ணுகிறார்கள். இத்தன்மையோ ரிருக்கும் வரையில் நமது தரித்திரம் நீங்கவழியேது ? இவ்வளவு நாகரீகமும் முற்றிப்பழுத்தவுடன் கனிந்தபழம் கொம்பிலிருந்து விழும் வண்ணம் இவர்களுடைய பாதிமீசைதானே கீழேவிழும்படிசெய்துகொள்ளுவார்கள். நம்மவர்களில் பாதிமீசை வைத்திருப்பவர்களின் முகலக்ஷணத்தை எழுத 3 அத்தியாயங்கள் வேண்டு மாதலால் விரிவஞ்சி விடுத்தோம்.

ஆறாம்படி மேஜை சாப்பாடு படுக்கைக்காப்பி, சோடா, லெமனேட், பாதி ஆங்கிலம், ரொட்டி பிஸ்கோத்:—மேற் கூறியவைகளுக்கு அடுத்தபடியாக மேஜையின்மேல் அன்னத்தை வைத்துக்கொண்டு நாற்காலியிலுட்கார்ந்து கொண்டு சாப்பிடும் வழக்கத்துடன் படுக்கையை விட்டெழுந்ததும் பல்கூடத்துலக்காமல் படுக்கைக்காப்பி (Bed Coffee) சாப்

பிடும் வழக்கமும் சாதாரணத்தில் வந்துவிட்டது. இவர்களிற்பலர் தாக மெடுக்கும் போதெல்லாம் சோடா அல்லது லெமெனெட் தான் குடிப்பார் கள். அதிலும் ஐஸ் (Ice) கலந்துகொள்ள மறப்பதில்லை. வரவர இட்டலி தோசை சாப்பிடுவதைப் புறக்கணித்து அயல் நாட்டு ரொட்டி, பிஸ்கோத் சாப்பிடுவது மேன்மையாகக் கொண்டாடப் படுகிறது. அரைமைல் கூட நடக்கச் சக்தியற்றவர்களைப்போல் 25 வயதுள்ள வாலிபரும் வண்டியிலே யேதான் செல்வார்கள். ரயில் மூலம் பிரயாணம் செய்யவேண்டி யிருந்தால் மிகச்சிறிய மூட்டைகளையுங்கூடச் சுமக்கப் போர்ட்டர்களுக்கு அணு 2; 4; கொடுத்துவிடுவார்கள். சில பிரகஸ்பதிகள் மதராசிலிருந்து மதுரைக்குப் போவதாயிருந்தால் கும்பகோணத்திலிருக்கும் தன் நண்பர் அல்லது பந்து ஒருவருக்கு, டிபன் கொண்டுவந்து ஸ்டேஷனில் தன்னைச் சந்திக்கும்படி தந்திகொடுத்து விடுவார்கள். அப்படித் தந்திகொடுப்பதும், இவர்கள் டிபன் கொண்டுபோவதும் ஒருவித கௌரவமான செய்கையாம். தந்திக்கு அவர் 1 ரூபாய் செலவு செய்திருக்க டிபன் கொண்டுபோய் ஸ்டேஷனில் கொடுப்பவரும் போகவர வண்டிச்சத்தமாக 0-8-0 செலவுசெய்து விடுவார். கடைசியில் டிபன் பெறுமானம் 4 அல்லது 8 அணுவே. இது பெரும் பைத்தியம். இதற்கு ஆஸ்பத்திரியே கிடையாது. சற்று அரைகுறையாய்ப் படித்தவர்கள் தமிழ் பேசுவதே கனவீனமென்று எண்ணி, பாதி இங்கிலீ ஷூம் பாதிதமிழுமாகப் பேச்சைக் கொட்டி விடுவார்கள். அதிகமாக ஆங் கிலம் கற்றவர்களுக்குத் தாய்பாஷையே வெறுப்பாகத்தோன்றும். மேடை களில் பிரசங்கம் செய்யநேர்ந்தால் தமிழில் வார்த்தைகள் வருவதேயில்லை.

ஏழாம்படி ஜின், ஒயின், பிராந்தி, மாமிசபக்ஷணம்:—ஆங்கிலங் கற்று மேற்கூறிய வேஷமணிந்து வயிற்றுப் பிழைப்புக்காக மேலுத்தியோ கஞ்செய்பவர்களிற் பலர் ஆங்கிலேயரோடு சதாகாலமும் பழகி, கைகுலுக் குவதையே பெருமையாக வெண்ணி அப்படியே செய்வதினுல் முதலில் அவர்களால் கொடுக்கப்படும் ஒயின்போன்ற போதையில்லாத பானங்களை யும், ரொட்டிகளையும் மறுக்கமுடியாமல் வாங்கிச் சாப்பிட்டுப் பிறகு நாள டைவில் ஜின், விஸ்கி, பிராந்தி, ரம் போன்ற போதை வஸ்துக்களையும் குடிக்கப்பழகி வரவர மாமிசத்தையும் உட்கொள்ளத் தலைப்பட்டு விடுகிறுர் கள். ஐயோ பரிதாபம்! இவர்களின் தேசப் பெருமையென்ன! குலப் பெருமையென்ன! முன்னேர்களின் ஒழுக்கமென்ன! ஆசாரமென்ன! குணமென்ன! தெய்வபக்தியென்ன! கல்வியென்ன! இவ்வளவையும் மறந்து மேற்கூறிய துர்ப்பழக்கங்களை அனுசரித்துக் கடைசியில் நிற்கும் நிலைமைதானென்ன! இவைகளிலெவையேனும் அவசியமென்றுவது விலக் கக்கூடாதவை யென்றுவது கூற முன்வருவாருமுளரோ? இவையாவும் செயற்கைப் பழக்கங்களே யல்லவா? நிற்க, இவ்விதம் நடக்கும் நம்மவ ரைப்பார்த்து நமது பெண்மணிகளும் அவரோடு ஒத்து ஊத ஆரம்பித்து அவர் செய்வது நேரல்ல வெனக்காட்டுவதற்கு அறிகுறியாம் தங்கள் சிகை யைக் கோணலாகக் கோடெடுத்து முன்னுல் படம் (Buff) வைத்துச்சீவி,

பட்டுக்குஞ்சத்தோடு தொங்கவிட்டு, முகத்தில் டாய்லட்பவுடர் பூசி, உயர்ந்த சோப்புகளை உபயோகித்து, லேஸ்வைத்த லோநெக் (Low Neck) முழுச்சட்டையணிந்து, மூக்குக்கண்ணாடி, பூட்ஸ்முதலியவற்றைப்போட்டு, மஞ்சள் குளிப்பதையும், பொட்டு வைப்பதையும்; மூக்குத்தி, தோடு போடுவதையும் அநாகரீகமாகக்கருதி, ஆசாரத்தைத் துரத்தி, தரித்திரமென்னும் பாதாளத்தில் விழுந்து தாங்கள் பர்த்தாவுக்கேற்ற பதிவிரதைகள் என்பதை ரூபித்து விடுகிறார்கள். விதம்விதமான உருவத்தோடு பலவித நகைகள் மாதந்தோறும் தோன்றவே பழைய நகைகளையழித்துத் திருத்துவதில் மாற்றையும் குறைத்துப் பணத்தைச் சேதாரமாகவும், கூலியாகவும் செலவிடுகிறார்கள்.

பெண்மக்கள் என்செய்வர் பாவம்! முற்காலத்தில் உடன் கட்டையேறுவதையும் கணவன் யுத்தத்தில் மாண்டதைக் கேள்விப்பட்டதும் தீயிற்குதித்து மாள்வதையும் பதிவிரதா தர்மமாகக் கொண்டிருந்த நமது ஸ்திரீரத்னங்கள் இப்போதுமட்டும் புருஷரைத்தனியே நவீனநாகரீகத்தையனுசரிக்க விட்டு விடுவார்களா? "அரிச்சந்திரன் தான் கெட்டது மல்லாமல் சந்திரமதியையும் கூடக்கெடுத்தான்" என்ற வழக்கச்சொல்லுக்கிணங்க நம்மவர் தம்மைத்தாமே கெடுத்துக்கொள்வது மல்லாமல் தமது பெண்மணிகளும் அவ்வாறே நடக்கக் காரண மாகின்றனர். பெண்கள் செய்யும் புண்ணியமும் புருஷன்செய்யும் புண்ணியங்களிலோர் பாகமும் பெண்களையே சேரும் என்றும், பெண்கள் செய்யும் பாவமும், புருஷன் செய்யும் பாவமும் புருஷனையேசேரும் என்றும் கூறும் தருமசாஸ்திரத்தையறிந்து இனியாவது சீரடைய முயலவேண்டும். சகோதரர்களே! மேற்கூறிய நவீன நாகரீகமெனும் பாதாளத்துக்குச் செல்லும்போது நம்மோடு துணைவருவது யாதெனில் டாம்பீகம், கர்வம், ஆணவம், ஈயாமை, ஆசாரக்குறைவு, அசுத்தம், பெற்றோரையும் பெரியோரையும் மதியாமை, பிறரை இகழ்தல், தேசாபிமானம் பாஷாபிமானம் குலாபிமானங் குன்றுதல், ஈசுரபத்திநாசம், நாஸ்தீகம் முதலியவையே யாகும். பின்பு பாதாளத்தில் சென்றவுடனே கிடைக்கும் பலன் தரித்திரமும், வியாதியும், அகால மரணமும், கடைசியில் நரகமுமே.

நேயர்களே! இனியாவது மயக்கத்திலிருந்து எழுந்து புத்தியை ஸ்திரப்படுத்தி நமது புண்ணிய பூமியின் பெருமையை விளக்குவீர்களாக. "எட்டுச் சுரைக்காய் கறிக்காகுமா" என்னும் பழமொழியை உறுதிப்படுத்த வேண்டாம். நமது தேசத்து இயற்கை யாசாரங்களைக் கைவிடவேண்டாம். நல்லவழியைக் காட்ட நாதன் முன்வருவார்.

A. மேத்து சலா, உபாத்தியாயர்,
போர்டு பெண்பாடசாலை, ஜெயங்கொண்ட சோழபுரம்.

## ஆத்திசூடி உதாரணக்கதைகள்.

இக்கதைகளைத்தொடர்ச்சியாக நம் ஆனந்தபோதினியில் எழுதிவந்து முடிவில் புத்தகரூபமாக வெளியிடவேண்டு மென்று சில வருடங்கட்கு முன்னர் நான், இப்போதினியின சஞ்சிகைகளில் பிரசுரித்துவந்தேன். சில அசந்தர்ப்பங்களால் 5-வது புத்தகம் 336-ஆம் பக்கத்தில் "கண்டொன்று சொல்லேல்" என்பதன் உதாரணக்கதை வெளிவந்ததோடு இவற்றின் தொடர்ச்சி நின்றுவிட்டது. எனினும், அத்தொடர்ச்சிக் கதைகளை மீண்டும் எழுதிவரவேண்டுமென்று ஆனந்த போதினியின் அபிமானிகளுட் சிலர் கேட்டுக் கொண்டமையின் அவை இப்பொழுது என்னால் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன.

### "ஙப்போல் வளை"

"ஙப்போல்—(தான்மாத்திரம் அ, இ, உ என்னும் சுட்டுக்கள், எ, யா என்னும் வினாக்கள் முதலியவற்றோடு கூடிமொழிக்குக் காரணமாய்ப்பயன் பட்டிருந்து, மொழிக்குக் காரணமாகாமல் எவ்வகைப் பயனுமின்றி யிருக்கும் தன் வருக்கமாகிய ஙா, ஙி, ஙீ, ஙு, ஙூ, ஙெ, ஙே ஙை, ஙொ, ஙோ, ஙௌ என்னும் பதினோரெழுத்துக்களையும் தழுவிக்கொண்டிருக்கும்) ஙகர மென்னும் எழுத்தைப்போல், வளை—(நீ, பயனுடையவனாயிருந்து சுற்றத்தார் பயனற்றவர்க ளாயினும் அவர்களைத்) தழுவிக்கொள்" என்பது இதன் பொருளாம்.

ஙகரமாத்திரம் அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், எங்ஙனம், யாங்ஙனம் எனச் சுட்டு வினாக்களோடு சேர்ந்து மொழிக்குறுப்பாய் இடப்பொருளை உணர்த்தி நிற்கும். ஙனம்-இடம். அதன் வருக்கமாகிய மற்றையபதினொரு எழுத்துக்களும் எந்த வாக்கியங்களோடும் சோந்துவருவதில்லை; அதனால் அவை பயனற்ற எழுத்துக்களேயாம். அப்படியிருந்தாலும், ஙகரமானது அந்தப் பதினொரு எழுத்துக்களையும் தன்னோடு சேர்த்துக்கொண் டிருப்பதால், தங்கள் தங்கள் வருக்கங்களாகிய பதினொரு பதினொரு எழுத்துக்களின் கூட்டங்களோடு சேர்ந்துநிற்கும் ககரமுதல் னகர மிறுதியாகவுள்ள பதினெட்டு மெய்யெழுத்துக்களின் கூட்டத்தோடு தானுமொன்றாகச்சேர்ந்து எண்ணிக்கையில் மதிக்கப்பட்டு நிற்கின்றது. அங்ஙனமின்றி, தன்னுடைய வருக்கவெழுத்துக்களைப் பயனற்றவை யென்று தள்ளிவிடும் பக்ஷத்தில் அது தனிப்பட்டு மற்ற பதினேழு மெய்யெழுத்துக்களின் கூட்டத்தோடு சேரத்தகுதியற்ற தாகிவிடும். இதைப்போல், சுற்றத்தார் பயனற்றவர்களா யிருப்பினும் அவர்களைச் சேர்த்துக்கொண் டிருப்பவர்கள் உயர்ந்தோர் பலராலும் நன்குமதிக்கப்பெற்று அவர்கள் கூட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள். அங்ஙன மின்றிச் சுற்றத்தாரை ஒதுக்கிவிட்டுத் தனிப்பட்டிருப்பவர் எவ்விடத்திலும் கௌரவமடைய மாட்டார்கள். ஆதலின், கௌரவமடைய விரும்புவோர், தங்கள் சுற்றத்தார் எத்தகையராயிருப்பினும் அவர்களைத் தழுவிக்கொள்ள வேண்டும்.

ஒரு நகரத்தில் பெரியகுடும்பத்தில் பிறந்த இரண்டு சகோதரர்கள் இருந்தார்கள். மூத்தவர்பெயர் இராஜப்பபிள்ளை; இளையவர்பெயர் சாந்த மூர்த்திபிள்ளை. இவர்களுள் மூத்தவர் மிக்க இடம்பமும், தற்பெருமையு முடையவர்; இளையவர் அடக்கமுள்ளவர். இராஜப்பபிள்ளை படிப்படியாகத் தம் அந்தஸ்தை உயர்த்திக்கொள்ளக் கருதிப் பலவழியிலும் பொருள் சேகரித்து மிகுந்த ஐசுவரிய முடையவராய் விட்டார்.ஆனால் இவர் தற்பெருமை யுடையவராதலின் சுற்றத்தாரை ஆதரிப்பதில்லை. அதனால் இவரிடம் பந்துக்களில் எவரும் நெருங்குவதில்லை. இவர், "நமக்குத்தான் திரண்ட ஆஸ்தியிருக்கின்றதே; சுற்றத்தார்தயவு எதற்கு ?" என்று அவர்களை ஒதுக்கித் தள்ளிவிட்டார். சாந்த மூர்த்திபிள்ளையோ, மிக்க தருமகுணம் பொருந்தியவராதலின், நன்மார்க்கத்தில் பொருளீட்டத் தொடங்கினார். அவருக்கு அதிகப்பொருள் சேரவில்லை. அவர் ஐசுவரியத்திற் குறைந்தவரா யிருந்தாலும் ஜனச்சேர்க்கை யுடையவரா யிருந்தார்; எவருக்கும் மிக்க உபகாரியா யிருந்தார்; சுற்றத்தாரை அன்புடன் ஆதரித்துவந்தார். பந்துக்களாயிருந்தவர்களெல்லோரும் ஒன்றுக்கு முதவாதவர்களா யிருந்தார்கள். அங்ஙன மிருப்பினும் அவர்கள்மீது சாந்தமூர்த்தி பிள்ளை விசுவாசங்குறைவதில்லை. அதனால். உறவினர்க ளெல்லோரும் அவரை எப்பொழுதும் சூழ்ந்து கொண்டே யிருந்தார்கள்.

இப்படி யிருக்கும்போது ஒருநாளிரவு திருடர்கள் வந்து சாந்தமூர்த்தி பிள்ளையின் வீட்டிற்புகுந்து கொள்ளையடிக்கப் பார்த்தார்கள். அங்கே அவருடைய பந்துஜனங்கள் கூட்டங் கூட்டமாகப் படுத்திருந்தார்கள். அவர்களைக்கண்டவுடன், திருடர்கள் "இங்கேபுகுந்தால் இக்கூட்டத்தார் நம்மைச் சும்மா விடமாட்டார்கள்" என்றுபயந்தோடி விட்டார்கள். அங்ஙனம் ஓடியவர்கள் இராஜப்பபிள்ளையின் வீட்டில போய்ப்பார்த்தார்கள். அவர், தமக்குமிஞ்சியவர் இல்லையென்னும் தற்பெருமை கொண்டவராதலின் எவர் துணையுமின்றித் தனியேபடுத்திருந்தார். திருடர்கள்நிர்ப்பயமாய் அவர் வீட்டில் நுழைந்து அளவிறந்த திரவியங்களைத் திருடிக்கொண்டுபோய் விட்டார்கள்.

பின்னொருசமையம் இவர்களிருந்த நாட்டின் சக்கரவர்த்திக்கு மகுடாபிஷேக கொண்டாட்டம் நடைபெற்றது. அதன் பொருட்டுப் பற்பல சிற்றரசர்களும், பிரபுக்களும் சக்கரவர்த்தியைக் கண்டுகொள்வதற்குக் காணிக்கைப் பொருள்களுடன் புறப்பட்டு அச்சக்கரவர்த்தி யிருக்கும் இராஜதானிப் பட்டினம்போய்ச் சேர்ந்தார்கள். அவர்களெல்லோரும் ஐசுவரியத்தில் குறைந்தவர்களாயினும் பரிவாரஜனக்கூட்டம் அதிகரித்தவர்கள். அதிக ஜனக்கூட்டத்துடன் தலைமைவகித்து ஓரிடத்திற்குச் செல்பவரையே உயர்ந்தவர்களென மதித்தல் உலக சுபாவமாதலின், அதிகஜனக் கூட்டத்துடன் சென்ற அவர்களையெல்லாம் சக்கரவர்த்தி நன்குமதித்து வரவேற்று அவர்களுக்கு நற்பரிசுகளும் கௌரவப் பட்டங்களுமளித்தான்.

இவர்களைப் போலவே, இராஜப்பபிள்ளையும், சாந்தமூர்த்தி பிள்ளையும் சக்கரவர்த்தியைப் பார்க்கச் சென்றார்கள். சாந்தமூர்த்தி பிள்ளை மற்றவர்களைக்காட்டினும் ஐசுவரியத்திற் குறைந்தவர். அதனால் அவர் தம் சத்திக்குத் தகுந்தபடி குறைந்தவிலை மதிப்புள்ள சாமானிய காணிக்கைப் பொருளே கொண்டுபோனார். ஆனால், மற்றவர்களிடமிருந்த ஜனக்கூட்டத்தைக் காட்டினும் இவருடன்சென்ற சுற்றமாகிய ஜனக்கூட்டம் அதிகரித்திருந்தது. இராஜப்பபிள்ளையோ மிகுந்த செல்வவந்த ராதலின் சக்கரவர்த்திக்கு இலட்சம் ரூபாய் விலைமதிப்புள்ள தங்கயானையொன்று செய்து கொண்டுபோனார். அந்த யானையின் உடம்பெல்லாம் நவரத்தினங்கள் இழைக்கப்பட்டிருந்தன. அவர் பணசசெருக்கால் ஸ்பெஷல்கப்பல் சொந்தத்தில் அமர்த்தி அதிலேறிச்சென்றார் ஆனால் அவர் நாய்போன்ற இனப்பகையுள்ளவராதலின் அவருடன் பரிவாரஜனங்கள் செல்லவில்லை. இரண்டு மூன்று வேலைக்காரர்மாத்திரம் சென்றார்கள். இவர்கள் சக்கரவர்த்தியின் நகரம்போய்ச சேர்ந்தவுடன், இராஜப்பபிள்ளை, "சாந்தமூர்த்தி ஐசுவரியத்திற் குறைந்தவனாதலின், சக்கரவர்த்தி அவனுக்குப் பேட்டி கொடுக்கமாட்டார்; நம்மைமாத்திரம் கௌரவிப்பார்; ஆதலின், அவன்முதலிற்சென்று அவமானப்பட்டு வரட்டும்; பின்னர் நாம்சென்று அவன் நாணமிக்ககௌரவம் பெற்றுவரலாம்" என்று அங்கே தங்கியிருந்தார். சாந்தமூர்த்தி பிள்ளை மனதிற்சிறிதும் கபடின்றி அரசனைப்பார்க்கச் சென்றார். அவருடன் அதிக ஜனக்கூட்டம் நெருங்கியிருந்ததைப் பார்த்தவுடன் மன்னன், "இம்மனிதன் உலகத்தார்க்கு மிக்க உபகாரியா யிருப்பான்; அதனாலேயே இவ்வளவு ஜனங்கள் இவனைச் சூழ்ந்துகொண் டிருக்கிறார்கள்; இவனேமிக்க கௌரவமுடையவன்" என்று அவரைக்கொண்டாடி நன்குமதித்து, அவருக்கு நற்பரிசளித்து, எல்லோரினும் மேம்பட்ட கௌரவப்பட்டங்கொடுத்தான். பின்னர், இராஜப்பபிள்ளை பொறாமைகொண்டு, நவரத்தினயானை தம்மிடமிருக்கின்றதென்னும் அகங்காரத்தோடு அரசன் பேட்டிக்குச்சென்றார். இவர் உயர்ந்த திறைப்பொருளோடுசென்றும், இவரிடம் மனிதர் கூட்டமில்லாதபடியால் அரசன் இவரை, மிகவும்தாழ்ந்தவரென்று மதித்து இவருக்குப் பேட்டிகொடுக்க மறுத்துவிட்டான். இராஜப்பபிள்ளை மேலும் அரசனைக் காணுதற்குப் பகீரதப் பிரயத்தனஞ் செய்துபார்த்தார். அது முடியவேயில்லை. பின்னர் அவர், தாம் கொண்டுவந்த நவரத்தின யானையை யாவது, ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கௌரவமான மனிதர்கள் மூலம் சக்கரவர்த்திக்குச் சொல்லியனுப்பினார். மன்னன் அதனையும் மறுத்துவிட்டான். அதன்மேல் இராஜப்பபிள்ளை வெட்கமுந் துக்கமுமுடையவராய் வீண் பணச்செலவுடன் திரும்பி வீடுவந்து சேர்ந்தார். இதனால், சுற்றந்தழுவுதலா லுண்டா முயர்வையும், அதனைவெறுத்தலா லேற்படும் இழிவையும் நன்குணர்ந்து கொள்ளலாம்.

செம்பூர்-வீ. ஆறுமுகஞ்சேர்வை.

---

## பிழை திருத்தம்.

நம் ஆனந்தபோதினி தொகுதி-11. பகுதி-1. பக்கம் 5-ல், எட்டிங்கு சேர்த்துவரும் 14-வது வரியில் 56 என்பதை 64 என்றும், 17-வது வரியில், 'நாளொன்றுக்கு' என்பதை, 'நாளிரண்டுக்கு' என்றும் திருத்தி வாசித்துக்கொள்க. ப-ர்.

---

## மாதர் நீதி மஞ்சரி.

(27-ம் பக்கத் தொடர்ச்சி.)

சீதை :—உலகமுய்யத் திருவவதாரஞ் செய்தருளிய ஸ்ரீ இராமச்சந்திரப் பெருமானது அரும்பெருந் துணைவியாகிய சீதாபிராட்டியாரின் கற்புத்தன்மை உலகமறிந்ததே. தன் மணாளர் சிற்றன்னையின் சூழ்ச்சியால் வனவாசம் செய்யப் புறப்பட்ட காலத்தில், அவருட னுறைவது காடாயினும் அதுவே தெய்வத் திருநாடென்றும், அவரைப் பிரிந்து வாழ்வது பொன்னுடெனினும் அது இடுகாடேயாமெனவும் கருதிக் கூடச் சென்றார். பஞ்செனச் சிவக்கும் மெல்லிய பாதங்கள் கன்றி வருந்தக் கற்களின்மீதும் முட்களின்மீதும் நடந்து சென்று நாயகருடன் தானும் துன்பந் துய்த்தார். தான் கஷ்டப்படுவதாகத் தெரிந்தால் தன் கொழுநர் மனமுளைந்து 'இதென்ன தொந்தரை! நாம்தான் கஷ்டப்படுகிறோமென்றால் அது போதாதென்று இவள் படுங் கஷ்டத்தால் வேறே வருந்தவேண்டியதாயிருக்கிறதே' யென்று எங்கே சலித்துக்கொள்வாரோ வென்று தம் துன்பத்தை வெளிக்காட்டாதடக்கி முகமலர்ச்சியோடு சென்றார். கற்புடை மாதர்க்கு மன்பெருந் தவம்,

'அன்பர் துஞ்சிடில் துஞ்சுத லாங்கவர்
துன்ப மெய்திடிற் றுமமத் துன்புறல்
இன்ப முற்றிடில் இன்புற் றிருத்தலே' யன்றோ ?

அசோகவனத்தில் இராவணனால் சிறை யிடப்பட்டிருந்த காலத்தில் அவரடைந்திருந்த நிலைமையை அளவிட்டுக் கூறவல்லார் யாவர்! 'அழுவதன்றி மற்றயலொன்றுஞ் செய்குவதறியார்.' இராவணனையும் அவனது போகபாக்கியங்களையும் ஒரு சிறு துரும்பெனக்கருதினர். அவனை எறிட்டும் பார்த்தறியார். இராவணனை அவருக்குக் காட்டி இவன் யாரென்று கேட்டால் இவன்தான் இராவணன் என்று அடையாளங் கண்டு சொல்லவும் அவரால் ஆகாது. உற்றுப் பார்த்திருப்பினன்றோ கூறக்கூடும்.

இராம தூதனைச் சென்ற அநுமார் இலங்கையில் தேவியாரைக் கண்டு, 'தாயே! என் வீணாக வருந்துகின்றீர்கள்! என் தோளின்மீது ஏறிக்கொள்ளுங்கள் ; ஒரு நொடியில் சுவாமியினிடம் சேர்க்கின்றேன்' என்றபொழுது, பிராட்டியார் அவரைப்பார்த்து "அப்பா, மாருதி! உன் வல்லமைக் கேற்றதையே சொற்றனை. ஆயினும் அது உசிதமல்லவே,

யான் மனங்கொண்டால் இவ்விலங்கைமாத்திரமல்ல, அளவில்லாத அனைத்துலகங்களையும் ஒரு வார்த்தையினாலேயே எரிந்து சாம்பராகும்படி செய்ய மாட்டேனா! அவ்வாறு செய்வது என் நாயகனுக்கு அழியாத பழிச்சொல்லை யுண்டாக்குமென்றல்லவோ அவ்வெண்ணத்தை யொழித்தேன். தவிர, நீ ஐம்புலன்களையு மடக்கிய உத்தமனேயானாலும் உன் வடிவம் ஆணுருவமே யல்லவோ ? ஆகவே யான் உன் மேனியைத் தீண்டுதலாகுமோ! இராவணன் உன்னைத் தூக்கிவரவில்லையா வென்பையோ ? அவன் கை என்மீது பட்டிருக்குமானால் இன்னும் இச்சரீரத்தோடு கூடி வாழ்தலை யுடையவளாவனோ? அவன் என்னைப் பூமியோடு பெயர்த்துத் தேரின்மீது வைத்துக்கொண்டு வந்தான்.

பொற்பி றங்க விலங்கை பொருந்தலர்
எற்பு மால்வரை யாகில தேயெனின்
இற்பி றப்பு மொழுக்கு மிழுக்கமில்
கற்பும் யான்பிறர்க் கெங்ஙனங் காட்டுகேன்?

அல்லன் மாக்க ளிலங்கை யதாகுமோ
எல்லை நீத்த வுலகங்க ளியாவுமென்
சொல்லி னாற்சுடு வேனது தூயவன்
வில்லி னாற்றற்கு மாசென்று வீசினேன்.

வேறு முண்டுரை கேளது மெய்ம்மையோய்
ஏறு சேவகன் மேனியல் லாவிடை
ஆறு மைம்பொறி நின்னையு மாணெனக்
கூறு மிவ்வுருத் தீண்டுதல் கூடுமோ?

தீண்டு வானெனி னித்தனை சேண்பகல்
ஈண்டு மோவுயிர் மெய்யி னிமைப்பின்முன்
மாண்டு தீர்வனென் றேநிலம் வன்மையால்
கீண்டு கொண்டெழுந் தேகினன் கீழ்மையான்.

(இராமாவதாரம்.)

எனப் பல நீதிகள் கூறித் தடுத்து அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்னும் இந்நான்கு குணங்களும் எச்சமயத்திலும் மாதர்களால் விடப்படுவன வல்ல வென்பதைச் சுட்டிக் காட்டினார்.

தசகண்டனை வதைத்து ஜானகியாரைச் சிறை மீட்ட காலத்தில் ஸ்ரீ இராமர் அவர் கற்பினைச் சந்தேகிக்க அவ்வளவில் பிராட்டியார் மனம் வெதும்பி இனி, 'சாதலிற் சிறந்ததொன்றில்லை, அதுவே தக்கதா' மென்று இலக்குவனால் எரியெழச்செய்து 'யான் கற்பிழந்தவ ளாயின் இத் தீ யென்னை யெரிப்பதாக' வென் றத்தீயிற் பாய்ந்தனர். அம்மையாரது கற்பெனுங் கடவுட் டீயினால் அவ்வக்கினியின் உடலெல்லாம் தீய்ந்தது. அவ்வெப்பத்தை யாற்றாமல் அனற் கடவுள் தாசரதியி னெதிரிற்றோன்றி அரற்றினன்.

வடபு லத்து வயங்கு மருந்ததிக்
கடவுட் கற்பினர் காந்திதங் கண்ணுறிற்
படர்சி கைக்கனல் வெங்கதிர் பான்மதி
சுடர்ம ழுங்கிப் பொலிவில தோன்றுமால்

என்பது பொய்யுரை யாமோ!

தேவியாரது கற்பின் திறத்தை உலகமறிந் துய்தற்பொருட்டே அங்ஙனஞ் சொன்னவராகலின் இரகுகுலோத்தமர் உடனே சீதையை அங்கீகரித்தனர்.

அயோத்தியை யடைந்து அரசாண்டுகொண்டிருக்கையில், 'ஈராறு மாதம் இராக்கதனிடம் சிறைப்பட்டிருந்த சீதையை ஸ்ரீ இராமர் சேர்த்துக் கொண்டிருக்கின்றா' ரென உலகம் கூறிய நிந்தைச்சொற்களை நினைத்து, நிறைந்த கருப்பமுற் றிருத்தலையும் நினையாது, மீண்டும் காட்டில் விட்டு வரும்படி யிட்ட நாயகரது கட்டளைக் குட்பட்டார். அங்கு வான்மீகி முனிவரின் ஆதரணையிலிருந்து புத்திரரை யீன்று வருத்தத்தோடு வசித்து வந்தார். முடிவில் இராமர் அவரைத் தன்னிடம் வரவழைத்து, மற்று மொரு முறை யாவருங் காணக் கனலின் மூழ்கித் தன் கற்பை நிலைநாட்டினுல், தான் அங்கீகரிப்பதாகக் கூற, வைதேகியார் மனநொந்து, இனி இவ்வுலகி லிருத்த லடாதென்று துணிந்து பூமிதேவியைப் பார்த்து,

வினைப்பாசத்தை யறுத்தமுனி வேள்வி காத்து மிதிலைபுகுந்
தெனக்கா வீசன் வில்லிறுத்தன் றெனைக்கைப் பிடித்த வெழிலாரும்
புனைக்கா யாம்பூ நிறத்தானை யன்றி மற்றோர் பூமனையான்
மனத்தால் வாக்கால் நினையேனேல் வழிதா வெனக்கு மண்மகளே!

வருந்தியே பயந்தநீ மற்றென் கற்புமவ்
வருந்ததி கற்புமொன் றென தென்றிடின்
பெருந்துதி மாநிலம் பிளத்தி யென்றனள்
இருந்துதி யமரரும் ஏத்துங் கற்பினள்.—(இராமாவதாரம்.)

'ஓ, மண்மகளே! என் கணவராகிய காயாம்பூ நிறத்துக் காகுத்தரை யன்றிப் பிறி தொருவரையும் மனத்தாலும் வாக்காலும் யான் நினையாதிருந்தது உண்மையாயின், நீ எனக்கு வழிகொடு; யான் அருந்ததிக்குச் சமதையான கற்புடையவளா யிருந்தால் நீ பிளந்து வழிகொடு' என்றார். அவ்வளவில் நிலம் பிளக்க, பூமிதேவி யாவருங் காணத்தோன்றித் தேவியாரைத் தழுவினபடியே அப்பிளவிற்குள் சென்றுவிட்டனர். கற்பின் சிறப்பினுக் கிதனினும் வேறு திருஷ்டாந்தம் வேண்டுமோ?

**தமயந்தி:**—விதர்ப்ப நாட்டரசனுகிய வீமனது புத்திரியாகிய இப்புண்ணியவதி தனது கணவனுகிய நளன் கலிபுருடனுல் தூண்டப்பட்டு வந்த புட்கரனுடன் சூதாடி நாடு நகரங்க ளனைத்தையும் தோற்றுப் பரதேசிபோல காட்டிற்குப் போகையில், தானும் அவனுடன் சென்றவர். 'மக்களை யழைத்துக்கொண்டு உன் தாய்வீடுபோய்ச் சே'ரென்று நளன் பலவாறு பகர்ந்தும் மனங்கொள்ளாமல் மக்களைமட்டும் ஓர் மறையவன் மூலமாய்த் தன் தாய்வீட்டனுப்பித் தான் அவனுடைய

கஷ்டத்தில் பங்காளியாய் தன் இனிய மொழிகளால் அவனைத் தேற்றி அவனுக்கு வருத்தந் தோன்றாதபடி உதவிசெய்து வந்தார். கலிபுருடன் அன்னப்பறவையின் வடிவாக வந்து தன் நாயகனதுடையைப் பறித்துக்கொண்டு செல்லத் தன்னுடையிற் பாதியை யீந்து ஆறுதல் கூறினர்.

தன் துயரைக் காணப்பொறாது இருண்ட இரவின் இடையாமத்தில் கைவிட்டகன்ற கணவனைச் சிறிதும் நோகாது தன் விதியையே நொந்து கொண்டார். அவரைக் கற்பழிக்கக் கருதிய கானவன் அவர் கண்விழித்த கனலால் சாம்பராஞன். தட்டித் தடுமாறித் தன் தந்தை நகரடைந்து தூதர்களைப் பல விடங்களுக்கு மனுப்புவித்துத் தன் நாயகனை யடைய முயற்சி செய்து அவ்வாறே அடைந்தவர். இவர் காட்டிலடைந்த துன்பங்களுக்களவில்லை. தன் தாய்வீட்டில் யாதொரு குறையுமின்றி சுகங்களை யனுபவிக்கலாமாயினும், அவ்வாறின்றிக் கணவனைப் பிரிந்த காலையில் கட்டியிருந்த புடவையுடனும் அழுக்கேறிப் பொலிவிழந்த சரீரத்துடனும் சிக்கேறிச் சடைபற்றிய கூந்தலுடனும் கணவனேக்கமே பெரிதாய்,

மன்னவனே யிப்பிறப்பிற் கண்டு மணந்திலனேல்
இன்ன மொருபிறப்பி லானலு மேழையேன்
தன்னந் தனியே யிருந்துதவ மாற்றியுமுன்
பொன்னகல முள்ளுருகப் புல்லா தொழிவேனே.

என வருந்திப் புலம்பிக்கொண்டிருந்தார். முதலில்தான் தன் மனத்திற் கணவனாகக் கருதிய நளனைத் தவிர வேறொருவரையும் கனவினும் கருதலாகாதென்னும் உறுதியால் இந்திரன், எமன் முதலிய தேவர்களையும் மணக்கச் சம்மதிக்காமல், அவர்கள் நளனைப்போல வடிவுகொண்டு சுயம்வர மண்டபத்திலிருந்தபொழுதும் பல அடையாளங்களால் உண்மை நளனை யறிந்து மணந்தவர். தேவர்களை மணக்காமல் அவமதித்த காரணத்தாலேயே கலியின் கோபத்திற்கிலக்காகி இவ்வளவு துன்பங்களையும் அடைந்தார். எவ்வளவு துன்பம் வந்தால்தானென்ன? உயிர் போவதாயிருந்தாலும் உத்தமமாதர் கற்பினின்றும் தவறுவார்களோ? "ஒழுக்கம் உயிரினுஞ் சிறந்ததன்றோ?" (தொடரும்.)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

## ஆரிய சித்தாந்தம்.

### ஆரியாசாரம்-செல்வத்தாலாம் பயன்.

(21-ம் பக்கத் தொடர்ச்சி.)

"சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்."

"தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு."

முன்னர் நித்தியவிதியில் தர்ப்பிரசம்சையில் அதிதிபூசை முதலியன கூறப்பட்டன. தானம் வாங்குதற்குரிய சிஷ்டர்களும் அங்குக் கூறப்பட்டார்கள். அவற்றுள் அடங்காத சுற்றத்தாரை யாதரித்தலையும், சுற்றத்தாரல்லார்க்கும் உபகாரம் செய்வதையும் ஈண்டுச் சிறிது கூறுவாம். சுற்றத்தார் என்பது பந்துவர்க்கங்களே யாவார். சிநேகபந்தத்தாற் கட்டுப்பட்டுச் சுற்றத்தாரைப்போல் ஒழுகு மியல்புடையாரையுங் கொள்ளலாம். "இளையுட் கழிந்தாரை யெடுக்க" என்ற நீதிவாக்கியமும், பந்துவர்க்கத்தாரையே குறிக்கும். இவருள் தாயாதிகளும் அடங்குவர். செல்வமுடையவனு யிருப்பவன் தன்சுற்றத்தாரை முதலில் காப்பாற்றவேண்டும். இது பற்றியே ஸ்மிருதிகளிலும் ஞாதியர் மாமன், சகோதர சகோதரிகளையும் ஆதரிக்க வேண்டு மென்பது கூறப்பட்டது. மறு கோத்திரத்தில் விவாகம்செய்து கொடுக்கப்பட்ட புத்திரிகள் சகோதரிகள் எல்லாரும் சுற்றத்தாருள் அடங்குவார்; தான் பெண்கொண்ட வம்சத்தாரும் இதிலடங்கியவர்களே. இவர்கள் எல்லாரையும் துன்பப்படாதபடி உபசரித்துக் காப்பதே செல்வத்துக் கழகாமென்க.

பொருள் தேடும் மார்க்கத்தில் கூறப்பட்ட தொழின் முயற்சிகளில் எதையாயினும் ஒன்றைக் கைப்பற்றித் தர்மநெறிதவறுமல் பொருளீட்டிய ஒருவன் தன் சுற்றத்தாரைத் தழுவி யாதரிப்பதையும் தன் கடமையாகக் கொண்டு ஒழுகல்வேண்டும். தன் பந்துக்கள் வறுமையினுல் துன்பப்பட்டுக்கொண் டிருக்கிறபோது அவர்களை அலட்சியஞ் செய்து பிறர்க்கு உபகாரம் செய்கிறவனும், தன் ஊரில் படித்தவர்களும் யோக்கியர்களும் இருக்கையில் அவர்களை விட்டுப் பிறர்க்குத் தானங்களைச் செய்கிறவனும் நரகத்தை அடைவார்களென்று மனுதர்மாதிநூல்கள் கூறுகின்றன. ஆதலால் முதலில் தன் சுற்றத்தாரில் வறுமையுற்று வருந்துபவர்களுக்கு உபகாரம் செய்து பிறகே மற்றவர்களுக்கு உபகாரம் செய்யவேண்டும். தன் சுற்றத்தாரை எப்பாடுபட்டாவது முன்னுக்குக் கொண்டுவந்து அவர்களை மேன்மைப்படுத்த வேண்டும். இது புத்தியுள்ளவனுய்ப் பொருளீட்டுபவனுக்கு முக்கியமான தருமமாம். இதுபற்றியே,

"ஙப்போல்வளை" என்று அன்னையார் கூறிச் சுற்றந்தழுவுதலை விளக்கியருளினர். அதாவது "ங" என்ற மெய்யெழுத்தானது தனது முயற்சியால்தான் மொழிக்கு முதலாகுந் தன்மையை அடைந்து தன் இனமாகிய ஏனைய உயிர்மெய் யெழுத்துக்களை மேன்மைப்படுத்தி, ஙகர உயிர்மெய் வருக்க வரியினின்றும் விலக்கப்படாமல் நிலைநிறுத்தி, ஙகாரமும், மொழிக்கு முதலா மேன்மையைத்தானும் அடைந்து சிறப்புற்றதுபோலத் தான் சிறப்படைந்து தன் சுற்றத்தாரை மேன்மைப்படுத்த வேண்டும் என்பது இச்சிறிய வாக்கியத்தின் கருத்தாமென்று கற்றறிந்தபுலவர் கூறுகின்றனர். ஆதலால் பிரயாசப்பட்டு முயற்சிசெய்து தானும் முதன்மைபெற்றுத் தன் சுற்றத்தாரையும் பெருமைப்படுத்துவதே அறிவுள்ள ஆடவனுக்கு அழகாமென்க.

இவ்வாறின்றி இந்த வாக்கியத்தை மாற்றி "யப்போர்வீளை" என்று கொண்டு, இது சேனாதிபதியை நோக்கிக் கூறப்பட்டதென்றும், சேனாதிபதியானவன் சேனைகளுக்கு முந்தியும், பிந்தியும் நின்றும் யுத்தம் நடத்தக் கூடாதென்றும், யகரமானது மொழிக்கு முதலிலும் கடையிலும் வாராமல் மொழிக்கு நடுவில் மாத்திரம் வருவதுபோலச் சேனாபதியானவன் தன் சேனைகளுக்கு நடுவிலிருந்து கொண்டு யுத்தம் நடத்தவேண்டு மென்றுங் கூறுவர் சிலர். இது பொருந்தாத உரையேயாம். ஏனெனில் இவ்வாறு யுத்தம் செய்வது சேனாபதிக் கியல்பாகாது.

எங்ஙனமென்னில், அதிரதர், மஹாரதர், சமரதர், அர்த்தரதர் எனச் சேனாதிபதிகளை நான்குவகையாகப் பகுத்துத் தன்னையும் தன் சேனைகளையும் தனக்குப் படைத்துணையாக வந்தவர்களையுங் காப்பாற்றிக்கொண்டு யுத்தம்செய்து எதிரிகளை ஜயித்து வெற்றிகொள்பவனென்று கூறும் வீரரிலக்கணத்தோடு மாறுபடுதலா லென்க. அர்ஜுனன் பக்கத்துணையில்லாதவனாய்ச் சென்று காலகேய நிவாதகவசரென்கிற மூன்றுகோடியே அறுபதினாயிரம் தானவரோடும் போர்செய்து வெற்றியடைந்தா னென்றும், விராடபுரத்தில் உத்தரகோகிரஹணச் சண்டையில் ஒன்று மறியாத உத்தரனைச் சாரதியாகக்கொண்டு யுத்தகளம் புகுந்து பீஷ்ம துரோணர்களையும் கர்ணன் முதலானவர்களையும் தானொருவனாகவேவென்று ஜயங்கொண்டா னென்றும், பதினான்காம் நாளின் பாரதப்போரில் துரோணரும், கிருதவன்மன் முதலிய வீரரும் தூசிமுனையில் (படையின் முன்னணியில்) முன் நின்றார்களென்றும், பாரதங் கூறுகின்றது. கரதூஷ சங்காரகாலத்தில் இராமர் இலக்ஷ்மணரைப் பின்னாக நிறுத்திப் பதினாலாயிரம் பேர்களையுந் தாமொருவராகவே யெதிர்த்தாரெனவும், மூலபல சங்காரகாலத்தில் சகல படைகளையும் தம்பியையும் பின்னாகநிறுத்தித் தாமொருவராகவே கணக்கிடப்படாத சேனையுட்புகுந்து யுத்தம் செய்தார் எனவும் இராமாயணமுங் கூறுகின்றது. இதனால் சேனாபதி சேனையின் மத்தியிற் பதுங்கி நின்று போர் செய்வது சுத்த வீரரிலக்கணமல்ல வென்று புலப்படுகின்றது. சேனாதிபதிகள் சேனையின் நடுவிலும் முன்னும் பின்னும் சமையம்போல் நின்று போர்செய்யவேண்டும் என்பதே நமது யுத்ததந்திர விதியாம்.

இங்கிலாந்து தேசத்திலும் மூன்றாம் எட்வர்ட் என்ற அரசன் பிரான்சில் படையெடுத்துச் சென்றபோது "கிரிஸி" என்னுமிடத்தில் பதினாறு வயதுள்ளவனும் இளவரசனுமாகிய பிளாக்பிரின்ஸ் என்பவனைத் தனியாகச் சண்டைசெய்ய விடுத்துத் தான் ஒரு மலையின்மேலிருந்து வேடிக்கை பார்த்துக்கொண் டிருந்தானென்றும், இளவரசனாகிய சேனாபதி தன் கத்தியை உருவிக்கொண்டு பகைவர் சேனைநடுவிற் புகுந்து யுத்தம்செய்கையில் பகைவர் படைத்தலைவரில் பலர் அவனைச் சூழ்ந்துகொண்டு கொடும் போர் புரிகையில், சில இங்கிலீஷ்காரர்கள் அரசனிடம் சென்று குமாரனுக்கு ஆபத்து நேர்ந்துவிட்டபடியால் தாமே நேரில்வந்து படைகளை

நடத்தவேண்டு மென்று வேண்டிக் கொண்டபோது அரசன், இன்றைய தினம் யுத்தம் அவனுடையதே; அவனே வெற்றிக்கொள்ளவேண்டும்; நான் வரமாட்டேன் என்று சொல்ல இதைக்கேட்ட இளவரசன் மஹா உற்சாகத்தோடும் வீராவேசத்தோடும் யுத்தம் செய்துகொண்டான் என்று இங்கிலாந்து தேசசரித்திரங் கூறுதலால் அந்நியநாட்டாருக்கும் அது கருத்தல்லவாம். இதுபோலச் சேனுபதிகள் தாமே யுத்தம் செய்த சரித்திரம் பிறதேசத்திலும் அளவில்லாதன உண்டு. இவ்விஷயம் ரைஹவுஸ் பிளாட், மிஸ்டரீஸ் ஆவ் லண்டனிலுங் காணலாம். சேனுதிபதி முன்னும் பின்னும் நிற்காமல் நடுவில் மறைந்து யுத்தம் செய்தல் தற்காலத்துப் பீரங்கியுத்தக்காரர்களுடைய கொள்கையே தவிர, வாளாலே ஜீவிக்கும் யுத்தவீரர்களிலக்கணமல்லவாம். ஆதலால் அதனை அன்னையார் இவ்விடத்து வியந்துகூறிப் பிள்ளைகளுக் குபதேசிக்க மாட்டார்.

இனி ஒருசாரார் மொழிக்கு முதலிலும் இறுதியிலும் வருமியல்பில்லாத ஙகரமெய் வல்லினத்தின் முதன்மைபெற்ற ககரமெய்யை அண்டிச் சீவிப்பதுபோலச் சக்தியற்றவன் வல்லமையுள்ள பிரபுக்களை யண்டிப் பிழைக்க வேண்டுமென்பதே யிதன் கருத்தென்றும், அதனுல் சக்தியில்லாதவர் ஜீவிக்கும் முறைமை கூறவெழுந்த தென்றுங் கூறுவர். இதனை "ஒருவனைப்பற்றி யோரகத்திரு" என்ற வாக்கியமும் விளக்குமென்பர். இதுவும் அனுசிதம். பின்யாதெனிற் கூறுதும்:

ஙகர உயிர்மெய் யெழுத்துகள் பனிரண்டில் ஒன்ருயினும் மொழிக்கு முதலில் வருவதில்லை யாதலால் அவற்றை நெடுங்கணக்கினின்றும் எடுத்துவிடலாம். ஏனெனில் அவை பயன்படுவதில்லை யாதலால், ஙகரமெய் ஒன்றே போதுமானது. தன்னினமாகிய உயிர்மெய் வர்க்கம் மொழிக்கு முதலாகாமையால் இழிவடைந்ததை யறிந்த ஙகரம் அவ்விழிவை நீக்கிக் கொள்ள வெகுமுயற்சிசெய்து மொழிக்கு முதலாய்த்தானும் மேன்மையை யடைந்து தன்னினத்தையும் மேன்மைப் படுத்திற்று. அது எவ்வாறென்னில் கூறுதும்:

எழுத்திலக்கணங் கூறும் இலக்கணநூலே யிதற்குப் பிரமாணம். மொழிக்கு முதலாமெழுத்துக்களைக் கூறும்போது,

"பன்னீருயிருங்கசதந பமவய
ஞங வீரைந்துயிர் மெய்யுமொழிமுதல்"

என்று கூறிய சூத்திரத்திஞல் ஙகரமும் ஓரிடத்து மொழிக்கு முதலாமென்பது பெறப்பட்டது. அது எவ்வாறு மொழிக்கு முதலாம், பிரத்தியட்சத்தில் காணும் சொற்களில்லையே யெனில், அது கூறுதற்கே எழுந்தது,

"சுட்டியா வெகர விஞவழியவ்வை
ஒட்டிஙவ்வு முதலாகும்மே"

யென்ற சூத்திரம். இச்சூத்திரத்தின் கருத்தை யொட்டியே யிச்சிறு வாக்கியமும் சுற்றந்தழால் என்பதை விளக்கவெழுந்ததாம்.

மொழிக்கு முதலாம் வன்மையற்ற ஙகரம் சுட்டெழுத்துக்களையும், யா, எ என்ற வினு வெழுத்துக்களையும் அடுத்துத் தெய்வத் தன்மையுள்ள அகர வுயிரோடுகூடி, அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம் எனவும், யாங்ஙனம், எங்ஙனம் எனவும் மொழிக்கு முதலாஞ் சிறப்பினைத்தான் அடைந்து, ஙகரமெய்யும் மொழிக்கு முதலாம் என்னும் பெருமையையுந் தன்னினத்துக்குத் தந்து மேன்மைபெற்றது.

சுட்டு வினுக்களை விலக்கிவிட்டால் "ஙனம்" என்னும் சொல்லுக்குப் பொருளில்லை. அவற்ரோடு கூடி நின்றபோது இடம், படி என்னும் பல சொற்பொருளையும் தரும். அப்போது அப்படி, அவ்விடம் என்னும்பொருள் படும். இவ்வாறு சுட்டு வினுக்களையும் அகரவுயிரையும் அடுத்துத் தானும் ஒருசொல்லுக்கு முதலாய் வந்தமையால் ஙகர உயிர்மெய்கள் நெடுங்கணக்கில் நிலைபெறலாயின என்பது காண்க.

இதனுல் ஒருவன் சக்தியற்றவனுனல் தெய்வத்தையும் உலகத்தில் உபகரிப்பதற்குரிய பிரபுக்களையும் அடுத்துத் தானும் மேன்மை யடைந்து தன் சுற்றத்தாரையு மேன்மைப்படுத்த வேண்டு மென்பது புலப்படுகின்றது. சுட்டு வினுக்கள் பிரபுக்களுக்கு உபமானமாயும் அகரவுயிர் தெய்வத்துக்கு உபமானமாயுங் கூறப்பட்டன. அகரம்தெய்வத்துக்கு உபமானமாவ தெவ்வா றென்னில்,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு."

"அகரவுயிர் போல அறிவாகி யெங்கும்
நிகரிலிறை நிற்கு நிறைந்து"

என்பனவற்றுல் அகரம் தெய்வத்துக்குவமிக்கப்பட்டது காண்க.

இங்ஙனம் ஙகரம் தெய்வம்போலும் அகர வுயிரைத் தனக்கு உயிராகக் கொண்டு, சுட்டு வினுக்களை யடுத்துத் தான் மொழிக்கு முதலாய்த் தன்னையும் தன்னினத்தையும் மேன்மைப் படுத்தியதுபோல, மனிதனும் தெய்வத்தை இதயத்திலிருத்திச் சிந்தித்து அரசன் முதலிய தகுந்து விளங்கும் பிரபுக்களை யடுத்துத் தன் சக்திக்கேற்ற தொழிலைச்செய்து தான் செல்வவந்தனுய்ச் சிறந்து விளங்கி அதனுல் தன் சுற்றத்தாரையும் வருந்தாமல் காப்பாற்றி மேன்மைப்படுத்த வேண்டும். அப்படிச் செய்தலே செல்வம் பெற்றதனுலாகும் பயனென்பது போதரும். இதன் பொருளை விரித்தெழுத இச்சிறுவியாசம் மிகவும் விரியுமாதலால் இதனை இம்மட்டோடு சுருக்கி முடித்துவிடுவோமாக. இன்னும் சமையம் நேருமாயின் ஆண்டும் சிறிது விரிப்போம். (தொடரும்.)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

குறிப்பு:-செம்பூர் வித்வான் ஸ்ரீமான் வீ. ஆறுமுகஞ்சேர்வையவர்களால் எழுதப்பெற்ற "ஆத்திசூடி உதாரணக் கதைகள்" என்னும் நூலில் சிறிது பாகம் சில வருஷங்களுக்கு முன் நமது ஆனந்தபோதினி சஞ்சிகையில்

வெளிவந்த விஷயம் நண்பர் பலர் அறிவர். அது மத்தியில் நின்றுவிட்டது. இந்த ஆவணிமாத முதற்கொண்டு அதன் தொடர்ச்சி வெளிவருகின்றது. அதில் "ஙப்போல் வளை" என்பதின் உள்ளுறை பொருள் விளக்கப்பட்டிருக்கின்றது. நமது யோகீஸ்வரரவர்கள் தாம் எழுதப்புகுந்த 'செல்வத்தாலாம் பயன்' என்னும் வியாசத்திலும் 'ஙப்போல் வளை' என்பதைப் பற்றி எழுதியிருப்பதால் ஒரே சஞ்சிகையில் இருவரால் எழுதப்பெற்ற ஒரே விஷயம் வந்துள்ளதென்று நண்பர்கள் யோசிக்கலாகாது. அதுவேறு சம்பந்தமாக வந்தது. இதுவேறு சம்பந்தமாக வந்தது. ப-ரீ.

---

## இயற்கைச் சுகாதார சாதனங்கள்.

"நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" எனும் பழமொழியை யறியாதார் எவருளர்? எனினும் நோயின்றிச் சுகமாகவாழும் பாக்கியத்தை யடைந்தவர்கள் வெகு சிலரேயன்றோ? இதற்குக் காரணமென்ன? பல காரணங்களுள் சுகாதார விஷயத்தில் பெரும்பாலோர் அசாக்கிரதையாயிருத்தல் ஒன்று என்பதி லையமில்லை.

சிலவாரங்களுக்கு முன் நான் காயலாவாக இருந்த என் நண்பரொருவரைக் காண அவர் வீட்டிற்குச் சென்றிருந்தேன். அவ்வீடு சுகாதார விதிகளுக்கு முற்றும் புறம்பாகக் கட்டப்பட்டிருந்தது. நோயாளி படுத்திருந்த அறையும் அசுத்தமாயும் ஈரமுள்ளதாயு மிருந்தது. அறையின் வெளிப்புறத்தில் துர்நாற்றம் வீசும் ஜலதாரை ஒன்று இருந்தது. என்னைக் கண்டதும் என் நண்பர் தன் வியாதியைப்பற்றிப் பேசத்தொடங்கினர். அப்பொழுது நான் அவரைப்பார்த்து "நண்பரே! நீர் வியாதியால் வருந்துவது வியக்கத்தக்கதல்ல. நீர் இருக்கும் அறை எவ்வளவு அசுத்தமா யிருக்கிறது பாருங்கள்! இந்த அறைக்கு வெளிப்புற மிருக்கும் ஜலதாரையி னின்றும் என்ன துர்க்கந்தம் வீசுகின்றது பார்த்தீர்களா? இப்படி யிருந்தால் ஏன் நோய் பீடிக்காது?" என்றேன். அதற்கு அவர் "நான் ஏழை; நான் அரண்மனையில் இருக்கவேண்டு மென்று ஆசைப்பட்டால் அது எப்படி முடியும்? என் வீட்டில்தானே யிருக்கவேண்டும்!"என்றார். அதற்கு நான் "நண்பரே! நான் சொல்லியதின் கருத்தைத் தாங்கள் அறிந்து கொள்ளவில்லை. இவ்வறையைச் சுத்தமாக வைத்துக்கொள்ள என்ன செலவு ஏற்படக்கூடும்? ஒரு தோட்டியிடம் அரையணுக் கொடுத்து அந்தத்தேங்கிக்கிடக்கும் ஜலதாரையைச் சுத்தப்படுத்தச் சொன்னாலென்ன? நீங்கள் மருந்துகள் வாங்குவதில் ரூபாய் ரூபாயாகக் கொட்டத் தயாராக இருக்கிறீர்கள்; அரையணுச் செலவு செய்ய உங்களுக்குச் சக்தியில்லையா? இந்த அரையணுச் செலவுசெய்துவிட்டால் பிறகு மருந்துகளுக்காகச் செலவு செய்யும் ரூபாய்களை மிச்சம் பிடிக்கலாமே" என்றேன். அதற்கு அவர் மிகுந்த வியாகூலத்துடன் "ஆ! எல்லாம் நீங்கள் பேசுவீர்கள்! நான் படும்பாடு உங்களுக்கென்ன தெரியும்! நான் என் ஆயுள் முழுவதும் இப்படியே வருந்தி வருந்திக் காலங்கழிக்க

வேண்டுமென்று பகவான் என் தலையிலெழுதிவிட்டானே ! கடவுளுக்கும் கண்கள் கெட்டுவிட்டன ! அந்தப் பாழாய்ப்போகும் தெய்வம் என்னை ஒரு மிக்கக் கொண்டு போகக்கூடாதா !'' என்று பலவாறு கடவுளை நிந்தித்துப் பேசினார். அவருடைய நிலைமை பரிதாபமானதாக விருந்தபடியால் நான் அவருக்குத் தேறுதல் சொல்லி வந்துவிட்டேன்.

நண்பர்களே ! நாம் வருந்துவது பெரும்பாலும் நமது கவனக்குறைவாற்றானென்பதை மறந்து கடவுளை நிந்தித்தல் அறிவுடையோர்க் கழகாகுமோ ? கடவுள் கருணைக்கடலன்றோ ? நாமெல்லோரும் அவருடைய மக்களன்றோ ? நாம் கடவுளைத்துதிக்கும் பொழுது " என் ஐயனே ! என்னப்பனே !'' என்று துதிக்கின்றோமல்லவா ? ஆகையால் தன் மக்களாகிய நாம் பிணியால் துயருற்று வருந்தவேண்டுமென்பது கடவுளுடைய திருவருளின் கருத்தாயிருக்க முடியுமோ? ஒருகாலுமில்லை. நம்மைச் சிருஷ்டித்தபொழுது கடவுள் பிணிகளையும் சிருஷ்டிக்கவில்லை! பிணிகளை நாமே வரவழைத்துக் கொள்ளுகிறோம் ! ஓர் வீட்டிற்கு யஜமானனாக விருக்கும் ஒருவன், தன் வீட்டில் வாழும் மக்கள், பெண்டிர், குழந்தைகள் எல்லோரும் இனிது வாழவேண்டுமென்னும் ஆவல் கொண்டவனாயிருத்தல் போலவே இவ்வுலகமென்னும் இப்பெரும் வீட்டிற்கு யஜமானராகவும் ஆதிகர்த்தாவாகவு மிருக்கும் சர்வேசுவரன், தன் மக்களாகிய இவ்வுலகின்கண் உள்ள பல்லாயிரம் கோடி மானிடர்களும் இன்புற்று வாழவேண்டுமெனும் ஆவல் கொண்டவரென்பதில் சிறிதும் ஐயமில்லை.

அங்ஙனம் நாம் இன்புற்று வாழக் கடவுள் என்ன ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்.? நாம் இனிதுவாழ உலக சுகாதாரமே அவசியமாகையால், உலகம் எக்காலமும் பரிசுத்தமடைந்து கொண்டே யிருக்கப் பற்பல இயற்கைச் சாதனங்களை யமைத்திருக்கிறா ரென்பது அறியத்தக்கது.

சிலர், உலக அமைப்பை மேற்போக்காகப் பார்த்துவிட்டு, " அப்படிப்பட்ட இயற்கைச் சுகாதார சாதனங்களென்ன ? நோக்குங்கால் உலகம் நாளுக்கு நாள் அதிகமாக அசுத்த மடைந்துகொண்டே வருவதாகத் தோன்றுகின்றதன்றிப் பரிசுத்தமடைவதாகத் தெரியவில்லையே! உலகிலுள்ள வஸ்துக்கள் நாளடைவில் அழுகிவிடுகின்றன ; விநாடிக்கு ஆயிரக் கணக்கான ஜந்துக்கள் மாண்டு அவைகளின் இறைச்சி அழுகித் துர்நாற்றம் பொருந்திய விஷவாயுவை யுண்டாக்குகின்றது ; ஆகாயமே நாளடைவில் விஷவாயுவால் நிறையப்பெற்று உலகில் பெரும் நோய்கள் தோன்றுகின்றன. ஆகையால் நாளடைவில் அசுத்தமே அதிகரிக்கின்றதுபோல் தோன்றுகின்றது '' என்று ஒரு கேள்வி கேட்கலாம். இது சரியானதன்று. உண்மையை ஆழ்ந்து ஆராயப்புகின், இவ்வுலகம் சதாகாலமும் பரிசுத்தமடைந்துகொண்டே யிருப்பது தெளிவாகும். அப்படிப்பரிசுத்தமடைய (1) நீர், (2) வாயு, (3) சந்திரன், (4) சூரியன், (5) நெருப்பு, (6) தாவரவஸ்துக்கள், (7) விலங்குகள், (8) புள்ளினங்கள் ஆகிய இவைகளே இயற்கைச் சாதனங்களாயுள்ளன. அஃதெங்ஙன மென்பதை ஆராய்வோம்.

(1) நீர்.—மலைச்சாரல்களிற் பெய்யும் மழையின் மிகுதியால் ஆறுகள் உற்பத்தியாகி நாட்டின்வழியே நூற்றுக்கணக்கான காதங்கள் ஓடிக் கடைசியில் கடலில் சங்கமமாகின்றன. இந்த ஆறுகள் நாட்டிலுள்ள துர்க்கந்தம் பொருந்திய பல பொருள்களை யடித்துக்கொண்டுபோய்க் கடலிற்சேர்த்து விடுகின்றன. மேலும், அசுத்தமாயும் சதுப்பாயும் கிடக்கும் நிலங்களினின்றும் அசுத்த ஜலத்தை வடித்துக்கொண்டு (Draining) போய்விடுகின்றனவாதலால் பூமியும் சுத்தமடைகின்றது. சதுப்பு நிலங்களைச் சார்ந்தவிடங்களில் சாதாரணமாகக் காணப்படும் விஷஜுரம் (Malaria) முதலிய நோய்கள் வேரோடு களையப்படுகின்றன.

ஆனால் இவ்வித மாசுள்ள பொருள்கள் ஆற்றில் அபரிமிதமாகக் கலக்கப்பட்ட போதிலும், அவ்வாற்றின் ஜலம் கெடாமல் எக்காலத்தும் பரிசுத்தமாயும் தேகத்திற்கு ஆரோக்கியத்தைக் கொடுக்கக் கூடியதாகவுமிருக்கின்றது. அவ்வாற்றில் கலக்கப்படும் துர் நீர் முதலியன கூட அவ்வாற்றின் ஜலத்தோடு சேர்ந்து பரிசுத்தமடைந்து விடுகின்றன. ஆதலாற்றான்,

"ஊரங் கணநீ ருரவுநீர் சேர்ந்தக்கால்
பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்"

என்றார் நாலடியாரிலும். இங்ஙனம், பல நதிகள் கடலிற்கொண்டு சேர்க்கும் அசுத்தப் பொருள்களினால் கடலும்கெடுவதில்லை. சதாபொங்கியெழும் அலைகளை யுடைத்தான கடலானது அசுத்தங்களை யெல்லாம் உட்கொண்டு விடுகின்றது. மற்றும், ஓர்முறை மழைபெய்தால் ஆகாயம் சுத்தமடைந்து காற்றில் பறக்கும் நோயுண்டாக்கும் நுண்ணிய புழுக்கள் அழிந்து போகின்றன வென்பதும் உண்மை. மற்றும் பலவிதங்களிலும் நீரினால் உலகம் சுத்தமடைகிறது.

(2) வாயு—ஆறுகளும், கடலும் உலகிலுள்ள அசுத்தங்களை யுட்கொண்டு விடுகின்றனவென்று முன்சொன்னோம். ஆனால் தண்ணீர் தேங்கிக் கிடக்கும் குட்டைகளும் மடுக்களும் அவ்வாறு அழுக்குகளைப் போக்குவதில்லை. ஜலம் தேங்கிக்கிடந்தால் அசுத்தம் முன்னிலும் அதிகரிக்கின்றதென்பது உண்மையன்றோ? உதாரணமாக நம் வீடுகளில் உள்ளஜலதாரைகளைப் பார்க்கலாம். ஆகையால், யோசித்துப் பார்த்தால், சலனம் அல்லது கமனத்தாலேயே (Continual motion) அசுத்தத்தைப் போக்கக்கூடிய குணம் தண்ணீருக்கு உண்டாகிறது என்பது தெளிவாகிறது. ஆறானது மேட்டிலிருந்து பள்ளத்திற்கு ஓடிவருவதால் அவ்வாற்றின் ஜலத்தில் சலனம் உண்டாகிறதெனினும் கடலில் சலனம் உண்டாவதற்கு வாயு காரணமாக இருக்கின்றது. கடலில் புயல்காற்று வீசும்பொழுது கடல் பொங்கியெழுந்து, கடலலைகள் மலைத்தொடர்களைப்போல் கிளம்பிக் கரையில் மோதுகின்றனவன்றோ?

இது நிற்க, வாயுவானது மற்றும் சிற்சில விதங்களிலும் பூமியைச் சுத்தம் செய்கின்றது. கடலினின்றும் வீசும் புயல்காற்று நாட்டில் பரவிப் பல

நஷ்டங்களை யுண்டு பண்ணினபோதிலும், அதன்வேகத்தால் நாட்டிலுள்ள விஷவாயுக்களையும், ஆகாயத்தில் பறக்கும் நோயுண்டாக்கும் நுண்ணிய புழுக்களையும் அடித்துக்கொண்டு போய்விடுவதால், புயல் ஓய்ந்த பிறகு ஆகாயம் பரிசுத்தமடைந்து அந்நாட்டில் வசிக்கும் ஜனங்களுக்குத் தேக சௌக்கியம் உண்டாகின்றது.

(3) சந்திரன்.—கடலில் சலனமேற்பட வாயு காரணமாயுள்ளதென்று முன்னமே சொன்னோம். மதியும் அதற்குக்காரண முள்ளதென்பது அறியத்தக்கது. சந்திரனுக்குக் கடலைக் கொந்தளிக்கச் செய்யும் ஓர் அபூர்வ சக்தியிருக்கின்றதென்பது மேல் நாட்டாரும் அங்கீகரித்ததே. கடற்கரை நகரங்களில் வசிப்போர் பௌர்ணமி தினத்தன்று கடல் கொந்தளிப்பதையும், அமாவாசை தினத்தன்று அவ்வளவு கொதிப்பின்றி யிருப்பதையும் கவனித்திருக்கலாம். கடல் கொந்தளிப்பதினால் அதில் சலனம் உண்டாகி அசுத்தங்களைப் போக்கும் தன்மை அதற்கு உண்டாகின்றது.

(4) சூரியன்.—சூரியவெப்பத்தாற்றான் உலகிலுள்ள பல மாசுள்ள பொருள்கள் உலர்ந்து தீங்கற்றவையாகின்றன. மேலும், மனிதர்களால் அழிக்கவே முடியாத (Bacillus) "பாசில்லஸ்" என்னும் நுண்ணிய புழுக்கள் கோடைக்காலத்தில் சூரியவெப்பத்தைத் தாங்கமாட்டாமல் அநுதினமும் ஆயிரக்கணக்காய் மாள்கின்றன வென்று பிரகிருதி சாஸ்திரிகள் கண்டு பிடித்திருக்கின்றனர். ஓர் முறை மழைபெய்தால் ஆகாயம் சுத்தமடைகின்றதென்று முன்னமேயே சொன்னோம். ஆனால் மழைக்கே கதிரவன் தான் காரணமாயுள்ளான்.

(5) நெருப்பு.—நெருப்பும் அசுத்தங்களைப்போக்கும் ஓர் இயற்கைக் கருவி. தங்கம், துத்திநாகம், பித்தளை முதலிய உலோகங்கள் முதலில் மண் அழுக்கு இவைகளுடன் கலந்து காணப்படினும், நெருப்பின் உதவியால் நாம் அழுக்கைப் போக்கிச் சுத்தமான உலோகத்தை யடைதல் போல், உலகில் அனேக பொருள்கள் அசுத்தமாய்க் கிடந்தாலும், அவைகளையெல்லாம் அக்கினியின் மூலமாகவே நாம் சுத்தம் செய்து கொள்ளுகிறோம். அக்கினிபட்டாலே எல்லாம் சுத்தமாய்விடு மென்றுதான் சாஸ்திரமும் கூறுகின்றது.

இங்கிலாந்தில் இரண்டாவது சார்லஸ் என்னும் அரசன் காலத்தில் "கிரேட்பிளேக்" (The Great Plague) என்னும் தொத்துநோய் தேசமெங்கும் பரவி ஆயிரக்கணக்கான ஜனங்களை யழித்துவிட்டது. ஆனால் அதன் பின் லண்டன் நகரமே ஓர் பெருந்தீயினால் அழிக்கப்பட்டது ஆகையால் அந்நோயே அந்நகரினின்றும் வேரோடு களையப்பட்டது. மேலும், அதற்கு முன் ஜனங்கள் வீடுகளை நெருக்கமாய்க் கட்டியும் அசுத்தமாய் வைத்து மிருந்தனர். ஆனால் இத்தீயின் பிறகு வீடுகள் விசாலமாயும், செங்கற்களாலும் சுகாதார விதிகளுக்கிணங்கக் கட்டப்பட்டன வாகையால்

ஆங்கிலேயர் இத்தீயை "மிக்க நன்மை செய்யவந்த ஓர் பெரும் தீ" என்றனர்.

(6) **தாவர வஸ்துக்கள்:**—தாவர வஸ்துக்களும் உலகிலுள்ள அசுத்தத்தைப் போக்குகின்றன. மரம்செடி முதலியவை பகற்காலங்களில் விஷமுள்ள கரியமலவாயுவை யுட்கொண்டு, எல்லா ஜீவராசிகளுக்கும் இன்றியமையாததான பிராணவாயுவைக் கொடுக்கின்றன. மேலும், அசுத்தமுள்ள குப்பை முதலிய பொருள்களே எல்லாச் செடிகொடிகளுக்கும் எருவாகின்றன. ஓர்முறை மழைபெய்தால் ஆகாயம் சுத்தமடைகின்றதென்று முன்னமேயே சொன்னோம். ஆனால் மழைபெய்வதற்கே மரங்கள் நிறைந்த காடுகள் அனுகுணமா யிருக்கின்றன. காடடர்ந்த பிரதேசங்களில் மழை அதிகமாக வருஷிப்பது நாம் அறிந்தவிஷயமே. பிரகிருதி சாஸ்திரிகளும் அதற்குக் காரணம் கூறியுள்ளார்கள். மற்றும் குளங்களில் காணப்படும் தாமரை அல்லி முதலியவை அக்குளங்களிலுள்ள ஜலத்தைச் சுத்தமாக்குகின்றன வன்றோ?

(7) **விலங்குகள்:**—விலங்குகளும் இங்ஙனம் உலகிலுள்ள அசுத்தங்களின் ஓர் பாகத்தைப் போக்குகின்றன. பேராசையுள்ள புலியானது பல மிருகங்களைக்கொன்று, எல்லாவற்றையும் தின்னாமல், அவைகளைச் சின்னாபின்னப்படுத்தி இங்கு மங்கும் எறிந்துவிட்டுச் சென்றுவிடுகின்றது. அம்மாமிசத்துண்டுகள் அழுகி விஷவாயுவை யுண்டுபண்ணுமுன், நரி முதலிய விலங்குகள் அவ்விறைச்சித் துண்டுகளைப் புசித்துவிடுகின்றன. மேலும், பன்றி முதலிய மிருகங்களுக்கு மிகவும் அசுத்தமான பொருள்களே ஆகாரமாகின்றன. நீரில் வாழும் மச்சங்கள் கூட அந்நீரில் கலக்கப்படும் அசுத்தங்களையெல்லாம் உட்கொண்டு நீரைச்சுத்தப்படுத்திவிடுகின்றன. ஆபாசமான கிணறுகளில் விரால் மீன்களை உயிருடன் விட்டுவிட்டால் சில வாரங்களில் அக்கிணறுகளின் நீர் மிகவும் தெளிவாகவும் சுத்தமாகவும் ஆகிவிடுவதை நாம் பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறோம்.

(8) **புள்ளினங்கள்:**—புள்ளினங்களும் மாண்டுகிடக்கும் ஜந்துக்களை யழுகவிடுவதில்லை. தெருவில் ஓர் எலி செத்துக்கிடந்தால், அதையடித்துக் கொண்டு செல்ல எத்தனைகாக்கைகளும் பருந்துகளும் ஆகாயத்தில் வட்டமிடுகின்றன! பிணந்தின்னும் கழுகுகளும் பிணங்களை யழுகவிடுவதேயில்லை.

இங்ஙனம், உலகமெனும் இப்பெரும் வீட்டிற்கு நாயகனான சர்வேசுவரன் இயற்கையில் எவ்வளவோ சுகாதார சாதனங்களை அமைத்திருக்க, நாம் ஒன்றையும் கவனியாமல், சுகாதாரவிதிகளை முற்றும் மறந்து, நம் இல்லத்தையே ஆபாசமாக வைத்துக்கொண்டிருந்து, பிறகு பிணியால் துயருறும் வேளைகளில் கடவுளை நிந்தித்தல் என்னே பேதமை!

அன்னவாசல்—நாராயணசாமி ராவ், B. A.

---

## நாலடியார் வசனம்

(25-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 23-ம் அதிகாரம்—நட்பிற் பிழைபொறுத்தல்.

(சிநேகரிடத்திற் காணப்படும் குற்றங்களைப் பொறுத்தல்.)

நல்லவர்க ளென்று (நினைத்து) மிகவும் இச்சைகொண்டு சிநேகிதர்களாகக் கொண்டவர்கள் (நினைத்தபடி) நற்குண நற்செய்கைக ளில்லாதவராயிருந்தாலும் அக்குற்றங்களை அடக்கிக்கொள்ளல் வேண்டும். நெல்லுக்கு உமியுண்டு, நீருக்கு நுரையுண்டு, பூவிற்குப் பயனற்ற புறவிதழுண்டு. (நெல் முதலியவற்றி னிடத்தில் உமி முதலியவை யிருப்பினும் அவற்றை நீக்கிவிடாமற் கொள்ளுதல்போல் சிநேகரிடமிருக்குங் குற்றங்களையும் பொருட்படுத்தாமல் சிநேகத்தைக் கொள்ளவேண்டு மென்பது கருத்தாம்.) (1)

அணைகோலி அடைக்குந்தோறும் (அவ்வணையை) உடைத்தாலும் தண்ணீரைப் பயன் படுத்திக்கொள்ள விரும்பிவாழ்பவர்கள் அத்தண்ணீரின்மேல் சிறிதுகோபமு மில்லாதவர்களாய்மறுபடியும் (மறுபடியும்) அணைகோலிக் கட்டி வைப்பார்கள். (அதுபோல) தாங்கள் விருப்பத்தோடு சிநேகங்கொண்டவர்கள் வெறுக்கும்படியான காரியங்களைப் பலமுறை செய்யினும் பொறுத்துக் கொள்வர். (2)

நல்ல நிறமுள்ள கோங்கு மரங்களின் மலர்களில் அழகிய வடிவத்தையுடைய வண்டுகள் சப்திப்பதற் கிடமான உயர்ந்த மலைபொருந்திய நாட்டையுடைய பாண்டியனே! தம்மோடு சிநேகமா யிருப்பவர்கள் மிகவும் தீயகாரியங்களைச் செய்தாலும் பொறுத்துக் கொள்ளுதல் தகுதியல்லவா? ஒருவர் பொறுமை இருவர் நட்பிற்குக் காரணமாம். (3)

மடிந்துவிழும் அலைகள் ஒதுக்கிய சிறந்த ஒளியையுடைய முத்துக்களும் மிகுந்த வேகத்தையுடைய மரக்கலங்களும் பொருந்திய கடல் துறையையுடைய பாண்டிய மன்னனே! சிநேகம் விடுதற்குக் கூடாதவர்கள் (நீக்க முடியாத சிநேகிதர்கள்) இயற்கையான நற்குண மில்லாதவராயின் (அவர்கள் தங்களைச் சிநேகித்தவர்களுடைய) மனதைச் சுடுவதற்காக மூட்டிய நெருப்புக் கொப்பாவார்கள். (4)

(வீட்டிலுள்ள) சகலபொருள்களோடு நல்ல வீட்டையும் எரித்து அழித்துவிட்ட நெருப்பை (அது கொடியதாயிற்றே யென்று நீக்கிவிடாமல்) தினந்தோறும் தேடி வீட்டில் (சமையலின்பொருட்டு) வளர்த்தலால், துன்பங்களைச் செய்தாலும் விடத் தகுதி யில்லாத சிநேகரைப் பொன்னைப் போலக் காப்பாற்றி (நட்பாகக்) கொண்டிருத்தல் வேண்டும். (5)

பொருந்துதற் கருமையான சிறப்புக்களைப் பெற்றுள்ளதும் ஆகாயத்தை யளாவியுள்ளதும் மூங்கில்களுள்ளது மாகிய மலைநாடனே! தம்மு

டைய கையானது கண்ணைக் குத்திவிட்டதென்று (அக்கையை) வெட்டி விடுவார்களோ? (வெட்டமாட்டார்கள்.) (அதுபோல) துன்பங்களைச் செய் தாலும் விட்டுவிடுதற் கரிய சிநேகிதரைச் சேர்க்காமல் விட்டிடுதல் தகுதியா குமோ ? (ஆகாது) (6)

விளங்குகின்ற நீரையும் குளிர்ச்சியையும் பொருந்திய கடற்கரை நாடனே! (ஒருவர்) குற்றங்களைச் செய்தாலும் பெரியோர் (அவரோடு) சிநே கித்து அக்குற்றங்களைக் கவனியார். சிநேகஞ்செய்த பின்பு அச்சிநேகர்க ளுடைய குற்றங்களை எடுத்துச் சொல்லும் உறுதியான அறிவில்லாதவர்கள் (தங்களுக்குத் தீமைசெய்யும்) அவர்களைப் போலவே கடைப்பட்டவராவர்.

சப்திக்கின்ற அருவியாறுகளையுடைய பாண்டிய நாடனே ! (யாதொரு சம்பந்தமு மில்லாத) அன்னியர் செய்தகுற்றம் மிகவும் கொடிய தாயினும் பார்க்குமிடத்தில் வெறுக்கத் தக்கது யாது ? அன்பு மிகுந்த சிநேகிதர் செய்த தீங்குகள் ஆராய்ந்து யோசித்தால் (அவற்றைவிட) சிறப்புடையன வாய்விடும். (8)

(நல்ல) சிநேகிதர்களென்று தம்மால் சிநேகிக்கப்பட்டவர்களை, தமது நண்பரென்று கொள்வதற்குத் தகுந்த நற்குணமுடையவரா யில்லாத தன் மையைத் தாம் ஆராய்ந்தறிவாரானால், அவரைத் தமது உறவினரைவிட நன்றாகக்கருதி (சிநேகமற்ற தன்மையை வெளிக்காட்டாமல்) தமது மனத் திலேயே அடக்கிவைத்துக் கொள்ளல் வேண்டும். (9)

(ஒருவனைச்) சிநேகித்த பின்பு (அவனிடத்திலுள்ள) குற்றத்தையும் குணத்தையும் ஆராய்ந்துகொண்டு திரிவேனானால்,ஒலிக்கின்றகடல்சூழ்ந்த பூமியிலுள்ளவர்க ளெல்லாம் இகழ்ந்து நகைக்கும்படி, சிநேகிதனுடைய இரகசியத்தை அடக்கிவைத்துக் காவாமல் வெளியிட்டுவிட்ட பாவி செல்லு மிடமாகிய தீக்கதியை அடைவேனாக. (10)

## 24-ம் அதிகாரம்—கூடா நட்பு.
### (மனப் பொருத்த மில்லாத சிநேகம்)

கறுப்பான மலைகளிலிருந்து மிகுந்த அருவிகளாகப் பெருகும் நீரின் எல்லையையுடைய நாட்டையாளும் பாண்டியனே ! கட்டுக்கோப்பில்லாத (மிகப்) பழமையான கூரையையுடைய வீட்டில் (மழைநீர் பெருகும் பொ ழுது) சேற்றை அணையாகக் கட்டி நீரை யிறைத்துக்கொண்டும் ஒழு கும் நீரை மேலே தாங்கிக்கொண்டும் தங்கள் காரியம் முடியுமளவு மிருப் பார்கள். (அதுபோல, சிலர் மனப்பொருத்தம் இல்லாவிட்டாலும் தங்கள் காரியம் கைகூடும் வரையிலும் உண்மையான சிநேகர்போல சொற்களா லும் செய்கைகளாலும் பாசாங்குகாட்டி நண்பர்போ லொழுகுவர் என்பது கருத்தாம்.) (1)

வெண்மையான மலையருவிகள் பொருந்திய நாட்டை யுடையவனே ! மேன்மை பொருந்திய பெரியோர்களுடைய சிநேகமானது மிகுந்த சிறப்

புடையதாய் மழைபோல மாட்சிமைப்பட்ட பயனையுடையதாம். சிறப்பில்லாத தாழ்ந்தோருடைய சிநேகமானது அதிகரித்தால் அம்மழை பெய்யாதிருத்தல் போலவாம். (2)

நுட்பமான அறிவையுடையவர்களோடு சேர்ந்து (இன்பங்களை) அனுபவிக்குந் தன்மையானது தேவருலகத்தைப்போல விரும்பப்படுந் தகுதியுடையதாம். நுட்பமான நூலுணர்ச்சி யில்லாதவர்களாகிய பயனில்லாதவர்களைச் சேர்ந்திருத்தல் நரகத்துன்பங்களுக் கொப்பாகும். (3)

பக்கங்களி லெல்லாம் நீண்ட சந்தனச் சோலைகளும் சாரல்களும் பொருந்திய மலைநாடனே ! (மனத்தில் அன்பாகிய) பந்த மில்லாதவர்களுடைய சிநேகமானது (முதலில்) வளர்வதுபோலக் காணப்பட்டுப் (பின்பு) வைக்கோலிற் பற்றிய நெருப்பைப்போல சிறிது பொழுது கூட நிலைத்திராம லழியும். (4)

தம்மால் செய்யக்கூடாத காரியங்களை 'நாம் செய்வோம்' என்று சொல்லுதலும், செய்யக் கூடியவற்றைச் செய்து முடிக்காமல் தாமதம் செய்துகொண்டு காலங்கழித்தலும், உண்மையாக (ஐம்புலன்களின்) இன்பங்களை அடையுந்தன்மையை யிழந்தவர்களுக்கும் அப்பொழுதே துன்பங்களை மிகவும் அடையுந் தன்மையை யுண்டாக்கும். (5)

ஒரு குளத்துநீரிலே பிறந்து ஒன்றாகவே வளர்ந்தாலும் மலர்ந்து விளங்கி வாசனைவீசுந் தன்மையுள்ள நீலோற்பல மலர்களை ஆம்பல்மலர்கள் ஒத்திருக்கமாட்டா. (அதுபோல) நற்குணமுடையவர்களின் சிநேகத்தைப் பெற்றிருந்தாலும் நற்குண மில்லாதவர்கள் செய்யுங் காரியங்கள் வேறுபாடுடையனவாகவேயிருக்கும். (6)

வயதுமுதிராத (இளமையான) பெண்குரங்குகள்தமக்கு எதிரே (இரை தேடிக்கொண்டு) வந்த தமது தந்தையான பருவம் முதிர்ந்தபெரிய ஆண் குரங்கினை, பயற்றம் நெற்றைப்போ லிருக்கும் தமது கைவிரல்களால் நெரித்துக்குத்தி (அதன் கையிலுள்ள பழம் முதலியவற்றைப்) பறித்துக் கொண்டு போவதற்கிடமான மலைகள் பொருந்திய நாடனே ! மனத்தில் ஒற்றுமையில்லாதவர்களுடைய சினேகமானது துன்பந்தருவதாம். (7)

(சிநேகனுக்குத்) துன்பமுண்டான காலத்தில் விரைவாகச் (சென்று) எனது அருமையான உயிரை (அந்தச்) சிநேக னுடைய கையில் (நான்) கொடேனாயின், தனது சிநேகிதனுடைய காவலிலுள்ள மனையாளின் உறுதியான கற்பையழித்த பாவிசெல்லும் தீக்கதியில் மிகப் பலகால மளவும் அழியாமல் வழங்கும் புகழும் பழியுமாகிய சொற்களைச் சொல்லும் இவ்வுலகத்திலுள்ளவர்க ளெல்லாம் (பழித்துச்) சிரிக்கும்படி செல்வேனாக. (8)

தேன்கூடுகள் பொருந்திய நல்லமலைநாடனே ! இனிய சிநேகதர்மத்தை யறிந்தவர்களின் சிநேகத்தைவிட்டு அற்ப அறிவுடையவர்களோடு செய்யும் சிநேகமானது, பசுவின் நெய்யைவார்த்து வைத்திருக்கும் பாத்திரத்தில் அதையெடுத்துவிட்டு வேம்பின் எண்ணெயை வார்த்தாற்போலும்.

பெருமைக்குரிய சில நற்குணங்க ளுள்ளவனிடத்தில் ஊரிலுள்ள மற்றவர்களுக்கு உபகாரஞ்செய்யுங் குணமில்லாம லிருப்பது குடிப்பதற்காக வைத்திருக்கும் பாலில் நீர் கலந்தாற்போலும். அறிவுடையோர் கொடியவர்களோடு கூடியிருப்பது நல்லசாதிப்பாம்பு பெட்டை விரியன்பாம்புடன் புணர்ந்து நீங்கினுற்போலும். (நாகம் விரியன்பாம்புப் பெட்டையோடு புணர்ந்தால் அழிவடைவதுபோல, நல்லோர் தீயோர் சேர்க்கையால் கெடுவர் என்பது கருத்தாம்.) (தொடரும்.) (10)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

## 'ஒருத்தி' என்னுஞ் சொல்லிற்கிலக்கணம்.

10-வது தொகுதி 10-வது சஞ்சிகை 393-ம் பக்கத்தில் திருவாளர். வே. ரா. தெய்வசிகாமணி என்னும் அன்பர் 'ஐயவினு' என்னுந் தலைப்பின் கீழ் 'எண்ணுல் வந்த பெண்பா லொருமைப் பெயர்க்கு ஒருத்தி யென்றல்லாது ஒருவள்' எனவழங்கப் பிரயோகமுண்டோ வெனக் கடாவிய வினுவிற்குச் செவ்வனிறை யெனக்கொள்ளாமல் இறைபயப்ப தெனக்கொள்ளவும். ஒருவள் எனப்பிழைபட வரைந்து வரும் மாணுக்கர் சிலர் உணரவும் இதனை எழுதினேம். தவருயின் உலகம் பொறுத்திடுக.

(தொல்காப்பியம், கிளவியாக்கம், 44-வது சூத்திரம்.)

" ஒருமை எண்ணின் பொதுப்பிரி பாற்சொல்
ஒருமைக் கல்லது எண்ணுமுறை நில்லாது."

என்பதனுரைக்கண் "ஒருவன் ஒருத்தியென ஒருமைக்க ணிற்றலும், இருவன் மூவன் இருத்தி மூத்தி என எண்ணு முறைமைக்கண் நில்லாமையுங் கண்டுகொள்க." எனவும்,

(தொல், பெயரியல், 8-வது சூத்திரம்)

" அவ்வழி.................பெயரே" என்பதனுரைக்கண் " யானென்பது, ஒருவன் ஒருத்தி யென்னும் பகுதியுணர்த்தா தாயினும், அத்திணையொருமை புணர்த்தலிற் பாலறியவந்த பெயராம் எனவும்,

(தொல், பெயர், 35-வது சூத்திரம்.)

" அவற்றுள்-நீ என்கிளவி ஒருமைக்குரித்தே" என்பதனுரைக்கண் "ஒருமையாவது, ஒருவன், ஒருத்தி, ஒன்றென்பனவற்றிற் கெல்லாம் பொதுவாகிய ஒருமை" எனவும்,

(தொல், பெயர், 37-வது சூத்திரம்.)

" ஒருவர் என்னும் பெயர்நிலைக் கிளவி இருபாற்கு முரித்தே தெரியுங்காலை" என்பதனுரையின் கண் "இருபாற்கு மெனப் பொதுப்படக்கூறினுரேனும், ஒருவரென்னும் ஒருமைப் பெயரான் உணர்த்தப் படுதெற்கேற்பன ஒருவன் ஒருத்தி யென்பனவே யாகலான், அவையே கொள்ளப்படும்" எனவும்,

(தொல், பெயர், 39-வது சூத்திரம்.)

" இன்ன பெயரே இவையெனல் வேண்டின்
முன்னஞ் சேர்த்தி முறையின் உணர்தல்."

என்பதனுரையுள் "ஒருசாத்தன், ஒருவனுனும் ஒருத்தியானும் பலரானும் ஒன்றானும் பலவானும் தன்னுழைச் சென்றவழி நீ வந்தாய், நீயிர்வந்தீர், என்னுமன்றே" எனவும் வடநூற்கடலை நிலைகண்டுணர்ந்த சேனாவரையர்தாம் ஒருவன் என்னும் இடமெல்லாம் ஒருவள் எனக் கூறாது ஒருத்தியென்றே பகர்ந்திருத்தலானும், திருவிளையாடற் புராணத்திலே பரஞ்சோதியார் "ஈறிலாதவ ளொருத்தியே ஐந்தொழிலியற்ற வேறுவேறு பேர் பெற்றென" வெனவும், 'ஒருத்திரா ஞெருத்திக்கிந்த வொருமக" னெனவும், "மன்னிய நரைமூதாட்டி ஒருத்திபேர் வந்தியென்பாள்" எனவும் அருளியுள்ளதனுனும், நமது பட்டினத்தடிகளும், நம்பியாண்டார் நம்பியும் முறையே திருவிடைமருதூர் மும்மணிக் கோவையிலே,

" சடைமே லொருத்தி சமைந்திருப்ப மேனிப்
புடைமே லொருத்தி பொலிய " எனவும்,

திருவேகம்பமுடையார் திருவந்தாதியிலே

" கயிலைஎம் பொன் ஞெருத்தி பாங்கொத்
திருந்தானை " எனவும்,

ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக் கோவையிலே

" கதிர்மதி நுழையும் படர்சடை மகுடத்து
ஒருத்தியைக் கரந்த விருத்தனை " எனவும்

திருவாய் மலர்ந்தருளி யிருப்பதனுலும், நன்னூலியற்றிய பவணந்தியாரும் "ஒருவன் ஒருத்திப்பெயர்மேல் எண்ணில" என்று பிற்காலத்தில் ஒருவள் எனச்சேர்த்துக் கொள்ளற் கிடங்கொடாது போயினமையானும் ஒருவள் எனக்கூறுதலும், எழுதலும் வழுவெனவே யாம் நினைக்கின்றேம். ஒருவள் எனக்கூறற் கெவ்விலக்கண நூலு மிடங் கொடாதென்பதுறுதி. எப்புராணத்திலும், எப்பிரபந்தத்திலும் அவ்வாறிராதென்றே கருதுகிறேன். இருப்பினும் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத்திற்கும் நன்னூலுக்கும் உரைகண்ட பேராசிரியர்களால் அது ஒதுக்கப்பட்டதெனக் கற்றோர் புறக்கணிப்ப ரென்பது திண்ணம்.

மதுரகவி. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார்,
தமிழாசிரியர், க. க. செ. கல்விச்சாலை, திருவெவ்வுளூர்.

---

## வெளியாயிற்று.

அத்துக்குடியில் பெரியபஞ்சுக் கிடங்குத் தெருவிலிருந்து கடற்கரைக்குச் செல்லும்வழியில் ஒருநாள் மாலை 5 மணிக்கு 30 அல்லது ஒன்றிரண்டு அதிகமென நினைக்கத் தகுந்த வயதையுடைய ஒருவன் கையிற் சில சிறுபுத்

தகங்களை வைத்துக்கொண்டு, ஏதோ வொன்றைக்கருதி ஆழ்ந்த சிந்தனை யுடையவனாய் நடந்துகொண்டே யிருந்தான். அவனுடைய தோற்றம் நாட்டுப்புறத்தான் போன்று காணப்பட்டது. அப்போது எதிரில் வந்து கொண்டிருந்த ஒருவன், திடீரென அவன் கையைப்பிடித்து "ஜேம்ஸ்! சுகமா?" என்றான்.

ஜேம்ஸ்:—"ஆ! சாமிதாஸ்! எதிர்பாராத சந்திப்பா யிருக்கின்றதே. இங்குதான் இருக்கின்றாயோ?" வென்றான்.

சாமிதாஸ்:—"ஆம், நான் இங்குதான் வேலையில் இருக்கின்றேன். உன் விஷயம் என்ன? எங்குவந்தாய்? மனைவி சுகமா? வென்று கேட்டான்.

ஜேம்ஸ்:—"ஐயோ! என்மனைவி இறந்தாள்" என்று திக்கித்திக்கிக் கூறித் தேம்பித்தேம்பி யழுதான்.

சாமிதாஸ்:—"என்ன! உன் மனைவி இறந்தாளா? என்ன வியாதி? எங்கு இறந்தாள்?" என ஆச்சரியத்தாற் பலகேள்விகள் கேட்டான்.

ஜேம்ஸ்:—"என்னைப்பற்றி உனக்கெவ்வளவு தெரியும்" என்றான்.

சாமிதாஸ்:—"நீ மாயவரத்திலிருந்து 'நானும் என்மனைவியும் கிறிஸ்து மதத்திற் சேர்ந்துவிட்டோம்' என்று 3 வருடத்திற்கு முன்பு எழுதிய கடிதந்தான் எனக்குக் கிடைத்தது. மற்றொன்றும் அறியேன். யாவும் விவரமாய்க்கூறு. வா! அவ்விடம்போய் உட்காருவோம். இங்கு அஞ் ஞானிகள் (கிறிஸ்துமதத்திற் சேராதவர்கள்.) எவரேனும் நமதுபேச் சைக் கவனிப்பார்கள்" என்று கூறி அழைத்தான்.

இருவரும் சென்று தெருவின் கோடியில் உள்ள சில பூச்செடிகள் நிறைந்த வசதியான விடத்தில் உட்கார்ந்து, பேசவாரம்பித்தார்கள்.

ஜேம்ஸ்:—"சாமிதாஸ்! என்கதையை மிகச் சுருக்கமாகவே கூறுகிறேன். நீ உன் குடும்பத்தோடு மதுரைக்குப் புறப்பட்டபிறகு ஒருநாள் மாலை வீட்டுக்குப் போனேன். என்மனைவியைக்காணோம். என் தாயாரைக் கேட்டதற்கு 'வாத்திச்சியம்மாளோடு பேசிக்கொண் டிருந்தாளே' என்றார்கள். பலவிடங்களிலுந் தேடிப்பார்த்தும் அவள் அகப்படவில்லை. முடிவில், திருச்சிராப்பள்ளியில் மிசியம்மாளிடம் இருப்பதாய் அறிந் தேன். 'பைபில் உமன்' என்ற உபாத்தினிமீது எனக்கு அடங்காக் கோபம் பிறந்தது. எவ்வளவோ முயற்சி செய்தும், கெஞ்சியும், அழு தும் இலஞ்சங் கொடுப்பதாய்ச்சொல்லியும், பயமுறுத்தியும், பிரியாது பண்ணியும் பலன் கிடைக்கவில்லை. மிசியம்மாள் அநுமதியில்லாமல் என் மனைவியைப் பார்க்க முடியாது என்று அறிந்தேன். என் செய் வது. 4-மாதங்கழிந்தது. ஒருநாள் மிசியம்மாள் என்னைக் கூப்பிட்டு 'உன் பெண்ஜாதி யுனக்கு வேண்டுமா? வேண்டாமா?' வென்றாள். என் 'தமக்கை மகளும், அருமை மனைவியுமாகிய என்செல்வத்தை வேண் டாமென்று கூறுவதற்கா இவ்வளவு பிரயாசை' என்றேன். மறுபடியும்

மிசியம்மாள் 'மனைவி வேண்டுமா? வேண்டாமா?' வென்ருள். 'வேண்டும்' என்றேன். 'அப்படியானுல், கிறிஸ்துமதத்திற் சேர்ந்துகொள்' என்ருள். வேறு வழியில்லாமையால், மிசி கூறியபடியே என் மனைவிக்காகக் கிறிஸ்துமதத்திற் சேர்ந்தேன். நான்குமாதமாய்ப் பாராதிருந்த என் மனைவியை ஆருவது நாளில் என்முன்பு காட்டினுர்கள். கோபமும், சந்தோஷமும் மாறிமாறி வந்தன. பற்பலபேசி முடிவில் கிறிஸ்து மதத்தையே தழுவினேம்.

ஒருமாதங்கழிந்த பிறகு, எங்களுக்கு 'நாங்களே சம்பாதித்துச் சாப்பிட வேண்டும்' என்ற விதி பிறந்தது. உணவுக்கு வழியில்லை. ஒருநாள் மிசியம்மாள் எங்களைக்கூப்பிட்டு 'கும்பகோணத்திற்கு வடக்கே 18. மைல் தூரத்தில் ஜெயங்கொண்ட சோழபுரம் என்று ஒருஊர் இருக்கிறது. அங்கே புதிதாய்க் கிறிஸ்தவர்களாகின்றவர்களுக்கு நிலங்களும், மாடுகளும் வாங்கிவைத்திருக்கின்ருேம். அங்கேபோனுல் பயிர்த்தொழில் செய்து சீவிக்கலாம்' என்ருள். அவ்விதமே செல்வதாய்ச் சம்மதித்து, ஒரு சீட்டும்பெற்று, அவ்விடம்போய்ச் சேர்ந்தோம். நாங்கள்போனவிடத்திற்கு 'பாதிரிக்காடு' என்று பெயராம். நாங்கள் இந்தியாவில் இத்தகைய காட்டைப்பார்த்தது இதுதான் முதல் தடவை. 6 அடிவரை சப்பாத்தியாற் சூழ்ந்திருந்த காடுகளைப் பார்த்தோம். குடிக்கத்தண்ணீர் இல்லாத அக்காட்டில், ஏற்கனவே ஒரு பறையனும், குயவனும் குடும்பத்தோடு கிறிஸ்தவர்களாகி, இரண்டுகுடிசைகளைக் கட்டிக்கொண்டு குடியிருந்தார்கள். குயவன் பானைசட்டிகளைச் செய்து கொண்டிருந்தான். அவன்பெயர் சந்தோஷ மென்றும், மற்றவன் பெயர் சமாதான மென்றும் அறிந்தோம். பாவம்! அவர்களின் நிலைமை, அவர்களுடைய பெயருக்கு முற்றிலும் மாறுபட்டிருந்தது. அங்கு அறிந்த விஷயங்களினுல் அப்பாதிரிக் காட்டைவிட்டு அன்றே புறப்பட்டோம். சொல்லமுடியாத கஷ்டத்தை யடைந்து தஞ்சாவூர் வந்தோம். அங்கு மாநோன்பு சாவடியிலுள்ள நம் நாட்டய்யரைக் (கிறிஸ்தவர்களின் இந்திய குருமாரைக்) கண்டு, எங்களின் பரிதாப நிலைமையை அறிவித்தோம். அதற்கவர் 'உன்தாய் தந்தைகளின்மீது பாகவியாச்சியம் செய்யலாமா?' வென்ருர். 'என் உயிர்போயினுஞ்சரி அதற்குச் சிறிதும் சம்மதியேன்' என்றேன். இரண்டொருநாள் கழித்து என்னைக் கோவிலில் மணியடிக்கும் வேலைக்கு வைத்துக்கொண்டு மாதம் ஒன்பதுரூபாய் சம்பளம் கொடுத்தார். என்மனைவியைத் தரங்கம்பாடிக்கு அனுப்பி, 'பைபில் உமன்' (கிறிஸ்துவேதப் பெண்) வேலைக்குப் படிக்கும்படிச் செய்தார். இவ்விதமாக 2 வருடம் கழிந்தது. ஒருநாளும் பிரியாத மனைவியை 2 வருடம் பிரிந்திருந்தேன்.

இரண்டாவது வருடத்தில், என்மனைவி பரீட்சையில்தேறி வெளிவந்தாள். அவளுக்கு வேலை கொடுப்பதற்காகப் பாதிரியார் அவளை அழைத்து "இரஞ்சிதம்! நீ நல்லப்பெண். சந்தோஷம். நீ கிறிஸ்துவேதத்தைப் போதிக்கிறவள் என்று எந்தவீட்டாரும் அறியக்கூடாது; வாத்திச்சி போலவே காட்டிக்கொள்ள வேண்டும். தெரியுமா?" வென்ருராம். அதற்கு என்

மனைவி 'தகப்பனே! ஏன் அப்படி வஞ்சிக்கவேண்டும்? உள்ளபடியே நான் கிறிஸ்துவேதத்தைப் போதிக்கிறேன். வெளியிலும் அறிந்துகொள்ளட்டும். உண்மையறிந்து வருகிறவர்கள் வரட்டும். அறியாப்பெண்கள் உள்ள குடும்பங்களில் வஞ்சனையாய் நடந்துகொள்ள வேண்டுமா? கிறிஸ்துநாதர் இப்படி வஞ்சிக்கச் சொல்லவில்லையே! என்னைத் தண்டிப்பாரே!' என்றாளாம். உடனே பாதிரியார் 'உனக்கும் இவ்வேலைக்கும் வெகுதூரம். வெளியிற்போ' என்று விரட்டிவிட்டாராம். என்மனைவி மிகக் கஷ்டப்பட்டுத் தஞ்சாவூர்வந்து என்னிடம் நடந்தவற்றைச்சொல்லி யழுதாள். இதை யறிந்த தஞ்சாவூர் நாட்டய்யர் என் மனைவியை யழைத்து, நீ செய்தபிழைக்கு மன்னிப்பைப் பெறுகிறாயா? என்றார். அதற்கு என்மனைவி 'நீங்களும் நான் பிழை செய்ததாகத்தான் கருதுகிறீர்களா?' வென்றாள். அதோடு நாட்டய்யர் இப்பேச்சை விட்டுவிட்டார். மூன்றுமாதகாலம் கஷ்டசீவனஞ் செய்தோம். ஒருநாள் இரஞ்சிதம் என்னுடன் பற்பல விஷயங்களைக் கூறி, 'எப்பொழுதும் மறக்கவேண்டாம்' என்று வேண்டினாள். அவளுடைய பேச்சு எங்கோ ஊர்ப்பயணம் போகிறவள் போலக் காட்டியது. நான் சந்தேகித்து 'ஏன் இன்று இப்பேச்சு?' என்றேன். அழுதாள்.

ஐயோ! என் பிரிய சாமிதாஸ்! அடுத்தநாட் காலையில் என் மனைவியைப் பிரேதமாய்க் கண்டேன். தாயையும். தந்தையையும் விடப் பெரிதாய்க் கருதிய 'என் உயிர்' என்னைவிட்டுப் பிரிந்தது. பற்பல கூறுவானேன். முடிவில் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கஞ் செய்யப்பட்டது. இரஞ்சிதம் இறந்ததை யறிந்த தரங்கம்பாடிப் பாதிரியார் 'கர்த்தருக்கு உண்மையாய் நடந்துகொண்ட இரஞ்சிதம் கர்த்தருடனே பரதேசிலிருப்பாள்' என்று ஆறுதல் எழுதியிருந்தார். அதனால், என் கவலை சிறிது ஒழிந்தது. சில மாதங்கள் சென்றபிறகு, பெரும்பான்மையான வேலைகளினால் பிழைக்கமுடியாத வியாதியிற் படுத்து, சகிக்க முடியாத துன்பங்களை யனுபவித்தேன். வியாதி குணமடைந்ததும் என் தாய்தந்தைகளைப் பார்க்கவேண்டுமென்ற எண்ணத்தினால், மாயவரம் போனேன். நீண்டகாலம் பாராதிருந்த என் தாய் என்னைக் கண்டதும் மிக்க அன்போடு வரவேற்று 'உன் மனைவி எங்கே?' எனக் கேட்டார்கள். துக்கம்பேசமுடியாமல் தடுத்தது.எனினும், நான் நடந்தவற்றைச் சொல்லி யழுதேன். என்தாய் அன்பும், அழுகையுமாக எனக்கு வெளித்திண்ணையில் சாதம் வட்டித்தார்கள். நான் சாப்பிட்ட பிறகு என் தந்தை 'நீச்சமதத்தைச் சேர்ந்தவனுக்கு இங்கென்னவேலை?' என்று கடிந்து பேசினார்கள். இனி இங்கு நிற்பது முறையல்லவென்றெண்ணிப் புறப்பட்டேன். என்தாய் சிறிது பொருள் கொடுத்தாள். கொஞ்சம் உடைகள் எடுத்துக் கொண்டு பல ஊர்களுக்கும் சென்று என் தங்கைகளையும் பார்த்துக் கொண்டு தஞ்சைக்கு வந்தேன். என் வேலை போயிற்று என்று அறிந்தேன். என்ன செய்வது. திண்டுக்கல் சென்று அங்குள்ள நமது நாட்டய்யரைக் கண்டு என் காலத்தின் கோலத்தை யறிவித்து வேலைக்கு வேண்

டினேன். 'டிரைனிங் (போதனுமுறைப் பயிற்சி) பாஸ்பண்ணி யிருக்கிறாயா?' வென்று கேட்டார். 'இல்லை' யென்று சொன்னேன். 'வேலையில்லை' என்றார். அங்கிருந்து மதுரைக்குப் போய் என் கதையைப் பாதிரியாரிடம் சொல்லி ஏதேனும் வேலை வேண்டுமென்றேன். 'பெண்பாடசாலைத் தோட்டவேலைக்குச் சென்றவாரந்தான் ஆள்வைத்தோம்; வேறு வேலைகளில்லையே' என விசனித்தார். விருதுப்பட்டி, சாத்தூர், சிவகாசி முதலிய ஊர்களிலும் வேலையில்லாமையினுல், முடிவில் இவ்வூருக்கு வந்தேன். நம் பாதிரியார் இப்புத்தகங்களைக் கொடுத்து விற்றுவரச் சொன்னூர். மூன்று பைசாவுக்கு மேற்பட்ட புத்தகங்கள் என்னிடம் இல்லை இதுவரை அரையணுவுக்கு மேல் விற்கவில்லை. காலையிலிருந்து ஆகாரமில்லை. இரவு என்ன கிடைக்குமோ தெரியவில்லை'' என்று கூறியழுதான்.

இவையாவும் அடக்கமுடியாத துயரத்தோடு கேட்டுக்கொண்டிருந்த,

சாமிதாஸ்:—"ஐயோ! ஜேம்ஸ்! உன் கதி இவ்விதமா? ஆயிற்று!" என்று மனம் வருந்திக் கூறி, சிறிது நேரங்கழித்து ஜேம்ஸ்! உன் மனைவி உன்னிடம் ஏதோ கூறினுள் என்ருயல்லவா? அதை என்னிடம் கூற முடியுமா?" வென்ருன்.

ஜேம்ஸ்:—"ஐயோ! சாமிதாஸ்! அது ஒருவரிடமும் கூறக்கூடாததேயாகும். ஆனுல், உன்னிடத்தில் மறைப்பதற்கு விருப்பமில்லை. எவர்களிடமும் கூறிவிடவேண்டாம். அவள் தன்னுடைய அனுபவத்திற் கண்டறிந்த சிலவற்றையே சொன்னுள். அதின் முக்கிய கருத்து "கிறிஸ்துமதம் சிலர் நினைப்பதுபோல பொய்யான மதம் அல்ல. ஆனுல், கிறிஸ்தவர்கள் அதன் மகிமையைக் குறைத்துவிட்டார்கள். இந்தியா முழுவதும் கிறிஸ்துமதமாக மாறவேண்டும் என்ற எண்ணமானது பேராசையால் அளவுக்கு மீறிவிட்டது. அதனுல், நேரான வழியை மறந்துவிட்டு, பலவித நயவஞ்சகச் செயல்களைக் கைக்கொண்டுள்ளார்கள். இத்தகைய வஞ்சகச் செயல்களைச் செய்வதால், கிறிஸ்துநாதருக்குப் பதில் சொல்லவேண்டுமே என்ற உணர்ச்சி சிறிதேனும் அவர்களுக்கு இல்லை. "எவன் என்பொருட்டு மனைவி மக்களையும், தாய் தந்தைகளையும் விட்டு வெளிவருகிருனே அவன் பாக்கியவான்" என்ற அருமையான வேதவசனத்தைத் தப்பாக அர்த்தஞ் செய்துகொண்டு பல குடும்பங்களைச் சின்னுபின்னமாகச் சீர்குலைத்துத் துன்புறுத்தி வருகிருர்கள். இக்கொடுஞ் செய்கைக்கு என்னையும் தூண்டுதல் செய்தார்கள். 'கிறிஸ்துமதத்தினர்' என்றுல், அது ஓர் சதியாலோசனைக் கூட்டத்தினர் என்றே வெளியிற் கருதுகிறர்கள். இவ் அநீதச் செய்கைகளினுலேயே, பரிசுத்தமான கிறிஸ்துமதம் நம் இந்தியநாட்டில் நிந்தனைக்கு ஆளாகின்றது. தங்களுடைய உயிரேபோவதாயினுஞ் சரி இத்தகைய இகழ்ச்சியைத் தாங்கள் கிறிஸ்து மதத்திற்குத் தேடிக்கொடாதீர்கள். ஞாபகமிருக்கட்டும்" என்பதேயாகும்.

அவள் வேண்டிக்கொண்டபடியே 'நான் எக்காலத்தும் பிறரை வஞ்சிக்காமல் உண்மைக் கிறிஸ்தவனாக இருப்பேன்' என்று வாக்க ளித்தேன். அன்றிரவே அவள் கர்த்தருக்குள் நிம்மதியாய் மரித் தாள் '' என்று கூறினான்.

இச் சொற்களைக் கேட்ட சாமிதாஸ், இரஞ்சிதத்தின் அருமையான குணங்களையும், நல்ல எண்ணத்தையும், அவள் கிறிஸ்துமதத்தில் வைத் திருக்கின்ற உண்மைப் பற்றுதலையும், திட வைராக்கியத்தையும் நினைந்து நினைந்து, அவளுடைய அகால மரணத்தைக் குறித்துப் பெரிதும் வருந்தி னான். கடைசியாக ஜேம்சை நோக்கி "நண்பனே! இரஞ்சிதம் கூறியது முற்றிலும் உண்மையேயாகும். நானும் இதைப்பற்றி அடிக்கடி சிந்திப்ப துண்டு. வெளியிற்கூறப் பயப்படுகின்றேன். சர்ச் கவுன்சிலில் (கிறிஸ்து மதக் கோவில்களை ஆட்சிபுரியுஞ் சங்கத்தில்) உள்ள நம்மவர்களுக்கு நல்ல எண்ணம் பிறந்து இதைப்பற்றிய சட்டம் ஒன்று ஏற்படுத்தினாலொழிய, நம்மால் ஒன்றுஞ் செய்யமுடியாது. பாவம்! மரியாதையான குடும்பங்களில் உள்ள அறியாப் பெண்களைத் திருட்டுத்தனமாய் அழைத்துக்கொண்டு வந்து, 'பெண் மேஜராய்விட்டது, கிறிஸ்துமதத்தில்தான் இருப்பேன் என்று சொல்லுகிறது, நாங்கள் என்ன செய்வோம்' என்று கூறுகிறவர் கள் கட்டாயம் கிறிஸ்துநாதர் தண்டனைக்குத் தப்பமாட்டார்கள். இச் செய்கை கருக்குலைக்குஞ் செய்கையையே ஒக்கும். இதற்கு மூலகாரண மாயுள்ள பைபில் உமன்களின் நடக்கை, அறிவுடையோர் எவராலும் கண் டிக்கத் தகுந்ததேயாகும்'' என்றான்.

ஜேம்ஸ்:—"ஆம், சாமிதாஸ்! நெஞ்சு திடுக்கிடத்தக்க இக்கொடுஞ் செயல் களைப் புறமதத்தினர் நம் பெண்மக்களிடத்திற் செய்துவந்தால், நமது மனம் எவ்வளவு வேதனைப்படும். அன்னிய மதத்தினர்களெல்லாம் அளவுகடந்த பொறுமையைக் கைக்கொண்டு, 'கடவுளே' என்று தங்கள் தங்கள் காலத்தைக் கழிக்க, நம்மவர்கள்மட்டும் ஏன் இவ்வி தஞ் செய்யவேண்டும் ? இச்செய்கை 'அநீதி' என்பதை யறிவிக்கக் கர்த்தருக்கும் மனமில்லையா?'' என்று மிகப் பரிதாபமாய்ச் சொன் னான்.

சாமிதாஸ் :—"ஜேம்ஸ்! தேவனுடைய நாமத்தை வீணில் வழங்காதே. நம்மவர்கள் நடுநிலைமையோடு சற்று ஆழ்ந்து கவனிப்பார்களாயின், இத்தகைய 'அவதூறு' கிறிஸ்து மதத்தினரை விட்டு விரைவில் விலகும் என்று நினைக்கிறேன். அதிக நேரமாயிற்று. நமது பேச்சுகள் நம்வரையிலேயே இருக்கட்டும். சீக்கிரம் பாதிரியாரிடத்திற்கு வா! என்னாற் செய்யக்கூடியதைச் செய்துவைக்கிறேன்'' என்று கூறி விடைபெற்றுச் சென்றான்.

சாமிதாஸ் சென்றபிறகு, ஜேம்ஸ் இரண்டொரு நிமிடம்வரை அவ் விடத்திலேயே அசையாதிருந்து பிறகு பெருமூச்சுவிட்டு எழுந்தான். தன்

கையில் உள்ள அரையணுவிற்கு ஏதேனும் பண்டம் வாங்கிப் புசிக்க எண்ணினவன்போலத் தோன்றினன். இதுகாறும் செடிமறைவில், ஆற்றமுடியாத துயரத்தோடு படுத்திருந்த நான் "ஐயா! ஜேம்ஸ்!" என்று பலமாய்க் கூவினேன். அதே நிமிடம் "தம்பி! தம்பி!! எழுந்திரு" என்ற சொற்களைக் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தேன். என் படுக்கையருகில் நின்றுகொண்டிருந்த என் தமயன் "ஐயா! ஜேம்ஸ்! என்று சத்தமிட்டாயே என்ன?" வென்று கேட்டார்.

அதற்கு நான் "ஒன்றுமில்லை; இந்துக்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் நன்மை பயக்கத்தகுந்த கனவு ஒன்று கண்டேன்" எனக் கூறினேன். அச்சமயம் கடிகாரத்தில் மணி மூன்று அடித்தது. எல்லோர்க்கும் இறைவனுயுள்ள பரம தகப்பனே இக்குறையை நிவர்த்திக்கவேண்டும் என்று பிரார்த்தித்தேன்.

கி. ஆ. பெ. விசுவநாத பிள்ளை,
இந்துசபை அமைச்சன், திருச்சிராப்பள்ளி.

குறிப்பு:—கிறிஸ்து சமயத்தினர் தங்கள் மதாபிவிருத்தியின் பொருட்டு உழைக்கச் சம்பளங் கொடுத்து வேண்டிய பேரை ஏற்படுத்தியிருப்பதால் 'பைபில் உமன்' முதலியோர் தங்கள் வேலையைச் செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஆதலால் அவர்கள்மீது குறைகூற நமக்கு நியாயமேயில்லை.

நமது மதத்திலும் கற்றறிந்து போதனசக்தி வாய்ந்த பெண்மணிகள் பலரிருக்கின்றனர். இவர்களுக்கு மாதச்சம்பளங் கொடுத்து நம்முடைய சிறுமியர்க்கும் பெண்டுகளுக்கும் இந்துமத போதனையைச் செய்துவரலாம். இதனைக் கவனிக்கத்தக்கவர்கள் நமது மடாதிபதிகளும் மற்றுமுள்ள தனவந்தருமேயாவர். இவர்களின் கவனக்குறைவாலும் பெற்றோர்களின் அஜாக்கிரதையாலும் பைபில் உமன்களால் நமது சிறுமியர்க்கும் இதர பெண்மணிகளுக்கும் கெடுதல் நேரிடுகின்றது.

"பைபில் உமன்" முதலிய கிறிஸ்தவ ஊழியர் தங்கள் வயிற்றுப் பாட்டை உத்தேசித்து நமது வீடுகளுக்கு வலிய வந்து தாய்மாரையும் பெண்மக்களையும் நயமான பேச்சால் தங்களுக்கிணங்கச்செய்து நம் பெண்மக்களுக்கு இனமாகப் போதிக்க முற்படுகின்றனர். "ஆஹா இவ்வளவு பெரிய அந்தஸ்திலுள்ளவர்களே கோச்சு வண்டியிலும் பீட்டன் வண்டியிலும் ஏறிக்கொண்டு, ஏழைகளாகிற நம்மை யொருபொருளாகக் கருதி, நமது வீடுதேடிவந்து, நம் பெண்மக்களுக்குப் படிப்புக் கற்பிக்க உடன்பட்டிருக்கிறார்களே. இதுவல்லவோ இணையற்ற உதாரகுணம்" என்று மகிழ்ந்து அவர்களுடைய போதனைக்கு உட்பட்டுவிடுகிறார்கள். அக்கம்பக்கத்தார் கண்டிக்க நேர்ந்தால், "அந்தஸ்துள்ள இந்திய கிறிஸ்தவச் சீமாட்டிகள் முதலியோர் மிகுந்த அலங்காரமாக நமது வீடுதேடி வந்துபோவது, இவர்களுக்குப் பெருமையா யிருக்கிற"தென்று பராமுகமா யிருந்துவிடுகிறார்கள்.

ஆனால் சமயம்பார்த்துத் தங்கள் அருமைப் பெண்மக்களைக் கிறிஸ்தவர்கள் கவர்ந்து செல்லும்போது பெரிதும் துக்கப்படுகிறார்கள். எவ்வளவோ பேர் இப்படிப் பெண்மக்களை இழந்துவருவதை நாம் கண்டுகொண்டுதான் வருகிறோம். இதைத் தடுத்தற்கான முயற்சியைமட்டும் செய்கிறதே இல்லை.

இனியாகிலும் பெற்றோர்கள் பைபில் உமன் முதலிய கிறிஸ்தவச் சீமாட்டிகளைத் தங்கள் வீட்டுக்குள் நுழையாதபடி பார்த்துக்கொள்வார்களாக. வெள்ளம் வருமுன் அணைபோடுவதுதான் நல்லது.

நாம் இந்த விஷயத்தை நமது பத்திரிகையில் வெளியிடவேண்டுமென்கிற நோக்கமில்லை. பலர் அடிக்கடி தூண்டுவதால் இந்த வியாசத்தை மட்டும் நமது குறிப்புடன் வெளியிடலானோம். ப-ர்.

---

## பகவத்கீதை வசனம்.

(43-ம் பக்கத் தொடர்ச்சி.)

[அவற்றுள், சூசீகடாக நியாயம் பற்றி ஈற்றுவினாவை நீக்குவதன் பொருட்டு ஸ்ரீ பகவான் உத்தரங்கூறியருளல்:—கொல்லனானவன் அதிகப் பிரயத்தினத்தினாலே அடித்தாக்குங் கடாகத்தைவிடுத்து, முதலில் அற்பப் பிரயத்தனத்தினாலே செய்யக்கூடிய ஊசியைச்செய்து கொடுத்தல் போல, அதிவிஸ்தாரமாக அறையத் தகுதியாய பொருளைவிட்டு முதலில் அற்பமாகக் கூறப்படும் பொருளைக் கூறுதலே சூசீகடாக நியாயமாம்.]

ஹே அர்ச்சுன! காமிய கருமத்தியாகத்தைச் சூக்குமதரிசிகள் சந்நியாசம் என்பர்; விசாரகுசலர் சர்வகருமங்களின் பலத்தியாகத்தைத் தியாகமென்பர்.

ஹே கௌந்தேய! துறக்ககாமன் வேட்க என்பதாதி விதிவசனங்கள், சுவர்க்காதி பலத்தை விரும்பியவர்க்குக் கூறும் சோதிட்டோமாதிகாமிய கருமம், சித்தசுத்தியிற் சிறிது மாத்திரையும் உபயோகமாகாதாம். அத்தகைய தியாகத்தைப் பெரியோர் சந்நியாசமென்பர். ஏனெனின்?

“ பூத பதிபூத பால னுலகூடு போக முடியாத தானதோர்
சேது வெனுமீச ஞான வினைமேவல் தேடி வழிபாடு மேவியே
வேத மொழியாலும் வேள்வி பலவாலு மேவு தவதான பூசையே
யாதி வழியாலு மாத ரவினாலு மாயு முனிஞானி யாகுவான் ”

என்னும் சுருதியானது நித்திய கருமங்கட்கே, தடையாய பாவநீக்க வாயிலாக ஆன்மஞானத்தில் உபயோகம் ஆம்வண்ணம் கூறுகின்றது. இச் சுருதியில் வேதமொழியாலும் என்றது பிரஹ்மசாரியின் சர்வதருமங்களையும் குறிப்பதாம்; வேள்விதானம் என்பனவோ இல்லறத்தானது எல்லாத் தருமங்களையும் காட்டுவனவாம். தவமென்றதோ வனத்திலிருப்பவனது சர்வதரும உபலக்ஷணமாம். “ ஆவதாஞான மதிகாரிகட்குப் பாவமாம் வினையின்படி றறலானே ” என்னும் வசனமும் தடையாய பாவநீக்கவாயிலாக நித்திய கருமத்திற்கு ஆன்மஞான உற்பத்தியில் உபயோகம் ஆமாறு நிகழ்த்துகின்றது. ஆகையால் நித்திய கருமங்கட்கே ஆன்மஞானத்தின் கண்ணேனும், ஆன்மஞானத்தின் இசைவடிவ விவிதிஷையின் கண்ணேனும் உபயோகமாம்; காமிய கருமங்கட்கோ உபயோகம் இல்லையாம். ஆதலின் மனத்தூய்மை வாயிலாயும் அறியும் வேட்கையாக்கும் வாயிலாயும் ஆன்மஞானத்தை யடையும் அவாவினன் பகவதர்ப்பண புத்தியானே நித்

திய கருமங்களையே யனுட்டிக்க வேண்டும். காமியகருமமோ அவ்வப்பய ஞேடு யாவுமே பரித்தியாகஞ் செய்யத்தக்கனவாம். "ஏமமின்றி யெவ் வினைப்பயன்களான யாவையுந், தீமையென்றறத் துடைத்திருத்தறியாக மாவதே" சர்வகாமிய கருமங்களின் நித்தியகருமங்களின் பலத்தியாகம். அதாவது மனத்தூய்மையை வாஞ்சித்து விவிதிஷையின் அடைவின் பொருட்டு எக்காமிய நித்திய சர்வகருமங்களின் அனுஷ்டான மூளதோ அவற்றின் பயனைத் தியாகித்தலைத் தியாகமென்பர் ஆராய்ச்சி மிகுந்த ஆரியர். துறக்க காமன்வேட்க என்பதாதி வசனங்கள் சோதிட்டோமாதிகாமிய கருமங்கட்குத் துறக்கம் மைந்தன் முதலிய வேறுவேறு பயனை கூறியிருக்கின்றன. என்றபோதிலும் அதிகாரியானவன் அவற்றுள் ஒன்றையும் ஆசைப்படாமல் அந்தக் காமிய கருமத்தையும்,சித்தசுத்தியின் பொருட்டே செய்தல் வேண்டும்; ஏனெனின், அக்கினிஹோத்திராதி கருமங்களில் இயற்கையாயோ நித்தியத் தன்மையேனும் காமியத்தன்மையேனும் உண்டாவதின்றும். மற்றேகருத்தாவின் கருத்தின் சிறப்பானே சித்தமாம். சுவர்க்காதி பல இச்சைவாயிலாகச் செய்யப்படும் அதன்கண் காமியத் தன்மையும், பலனை விரும்பாமற் பகவதர்ப்பண மதியானே செய்யும் அதன்கண் நித்தியத்தன்மையும் இருக்குமாதலின், இது துணியலாம்:—ஆன்மஞானத்தின் ஆசைவடிவ விவிதிஷையின்கட்கேவலம் நித்தியகருமங்கட்கே உபயோகமாமன்றிக் காமியத்திற் கிறையளவு மில்லையாமாதலின், முமுக்ஷுக்கள் காமிய கருமங்களையும் அவற்றின் பயனையும் அடியோடு பரித்தியாகித்தல் வேண்டும். விவிதிஷையின்கண் நித்தியகருமங்கட்கு உபயோகமிருத்தலேபோல அவ்வப் பல ஆசையற்ற காமியகருமத்திற்கும் உபயோகமாம். ஆகையால் விவிதிஷைபெறக் காமிய நித்தியகருமங்களைச் செய்த போதினும் அதிகாரி அவ்வக்கருமத்தின் அவ்வப்பயன்றன் ஆசைமாத்திரத்தைப் பரித்தியாகஞ்செய்க. பலசகிதகாமிய கருமமாத்திரத்தின்றியாகமோ சந்யாச சப்தப்பொருளாம். நித்திய காமியரூப சர்வகருமங்களின் பல இச்சைமாத்திரப் பரித்தியாகம் தியாக சப்தத்தின் பொருளாம். ஆகலின் கடபட மிரண்டனுக்கும் கடத்வபடத்வ ஜாதியுடைய பொருள் தோற்றுவதேபோலச் சந்யாசம் தியாகம் என்னுமிரண்டு சப்தங்கட்கும் வேறுவேறு ஜாதியுடைய அர்த்தமின்றும். மற்றே, மனத்தூய்மையின் பொருட்டுச் சொரூபமாகவே கருமங்களின் அனுஷ்டானம் உளதாயினும் அவ்வக்கரும அவ்வப்பல இச்சையின் பரித்தியாக வடிவ ஒரேபொருள் அவ்விரண்டு சப்தங்கட்கும்சித்தமாம். இதனானே ஒருவினவின் விடைதுணியப்பெற்றதாம்.

[இரண்டாவது வினவின் விடையை யருளும் பொருட்டும் சந்யாச தியாக சப்தங்களின் அருத்தங்களில் மூவகைத் தகைமையையருளும் பொருட்டும், முதலில் அப்பொருளில் வாதிகளின் ஐயத்தை ஸ்ரீ பகவான் அருளல்.]

ஹே பார்த்த ! இராகத்துவேடாதி தோடங்களைப் போலக் கருமமும் பரித்தியாகஞ்செய்ய யோக்கியமாம். இவ்வண்ணம் சிலமதிமான்களியம்புவர். யாகதான தவரூப கருமம் தியாகிக்க யோக்கியமன்று மென்பர் வேறு சிலபெரியோர். ஹே பற்குன ! நித்திய, நைமித்திக, காமிய, பிராயச்சித்த முதலிய சர்வகருமங்களும், இவனது பந்தஹேதுவாதலின், தோஷமுடையனவாம், ஆதலின் மனத்தூய்மை யற்ற கரும அதிகாரியும் கருமமுழுதையும் பரித்தியாகமே செய்யவேண்டும் என்பர் சில பெரியோர். இராகத்துவேடாதி தோடங்கள் அதிகாரியால் விடத்தக்கனவேபோல ஆன்ம

ஞானத்தை யடையாதவரும், அதையறியும் அவாவடையாதவரும் ஆகிய கருமாதிகாரிகளும் தங்களுடைய பந்தவேதுவென வுணர்ந்து சர்வ கருமங்களையும் தியாகமே செய்யவேண்டும். யாக தான தவ ரூப கருமத்தை, சித்த சுத்தியற்ற கருமஅதிகாரி மனத்தூய்மைவாயிலாக அறியும்வேட்கையுண்டாதற் பொருட்டு ஒருபோதுமே விடலாகாது எனச் சில பெரியோர் கூறுவர்.

[இவ்வண்ணம் கரும பரித்தியாகத்தில் வாதிகளின் சம்சயத்தைக் கூறி ஸ்ரீ பகவான் தமது தீர்மானத்தை யுரைத்தருளல்.]

ஹே பரதகுல மேன்மைமிக்கோய்! அந்தக் கருமத்தியாகத்தின்கண் எமது துணிபை நீ கேட்குதி; ஹே சர்வபுருட சிரேஷ்ட! அத் தியாகம் மூவகையாய் அன்றோ கூறப்பட்டிருக்கின்றது!

ஹே அர்ச்சுன! மனத்தூய்மையற்ற கரும அதிகாரியைக் கர்த்தாவாகவுடைய சந்யாசம் தியாகம் என்னும் இரு சப்தங்களானே பிரதிபாதிக்கப்பட்ட பலேச்சா பூர்வக கருமங்களின் பரித்தியாகத்தைச் சொரூபமாகவுடையதாக முன்னர் எம்மாற் கேட்கப்பெற்ற அதன்கட் பூர்வ ஆசிரியர் செய்த துணிபை நீ கேட்குதி யென்றருளியதென்னே? அந்தத் தியாகத்தில், தங்கள்பாற் கேட்கவேண்டியதாக, அறியக்கூடாததாந்தகைமையிருந்தவாறென்? என்னும் அர்ச்சுனனது சங்கையை நீக்கியருள ஸ்ரீ பகவான் திருவாய் மலர்ந்தருளுகின்றார்:—ஹே அன்ப! கருமாதிகாரியைக் கருத்தாவாகவுடையதாகிய பலேசசாபூர்வக கருமங்களின் றியாகத்தை வேதமுணர்ந்தவர் மூவகையாகக் கூறுவர். தாமதாதி முக்குண வேறுபாட்டானே அந்தத் தியாகம் மூவகையாக மொழியப் பெறும்; பலத்தின் இச்சை வடிவ விசேஷணத்தானே விசிஷ்ட கருமத்தியாகம், விசேஷணமின்மையானே விசேடியமின்மையானே உபயமின்மையானே ஆமெனப் பெறும்; அஃதாமாறிங்ஙனம்:—தண்டரூப விசேஷண விசிஷ்டமாகிய தண்டியினபாவம் விசிஷ்டா பாவமாம். அது, புருட விசேடிய மிருந்தும் தண்ட விசேஷணமிலதேயாம். அப்போது விசேஷண தண்டமின்மையால் உண்டாய விசிஷ்டாபாவ மெனப்படும். தண்டவிசேஷண மிருந்தும் புருட விசேடியமிலதேல் தண்டியபாவமாம். இது விசேடியமிலதாக வுண்டாம் விசிஷ்டா பாவமாம். இரண்டு மிலாதபோதும் தண்டியபாவமாம். இது இரண்டனபாவத்தா லுண்டாய விசிஷ்டா பாவமாம். இத்திருஷ்டாந்தம் போலவே, பலேச்சா விசேஷண விசிஷ்ட கருமத்தியாகரூப விசிஷ்டா பாவம். இச்சையாகிய விசேஷண மில்லாமையானும் கருமரூப விசேடிய மில்லாமையானும், உபயமின்மையானும் உண்டாம்; கருமமிருப்பினும் இச்சை விடுதலானே விசிஷ்டத் தியாகமாம். இது விசேஷண மின்மையாலுண்டானதாம். இச்சையிருப்பினும் கருமத்தை விடுதலானே ஆகுமது விசேடிய மின்மையாலாயதாம். இரண்டு மின்மையானே ஆகுமதுவோ விசேடிய விசேஷண மிரண்டு மின்மையாலுண்டாயதாம். அவற்றுள் முதற்றியாகமோ சாத்விகமாதலின் கவரத் தகுதியதாம். இரண்டாவதோ இராஜச தாமத பேதத்தானே இருவகையாம். இவ்விரு வகையுமே இகழ்ந்துவிடத் தக்கனவாம். துயர்மதியாற் செய்யப்பெற்ற கருமத்தியாகம் இராஜசமாம் மயல்வடிவ விபரீதத்தானே செய்யப்பெற்ற கருமத்தியாகம் தாமசமாம்; இவ்வண்ணம் கரும அதிகாரியானே செய்யப்பெற்ற கருமத்தியாகமே அருச்சுனனது வினு விடயமாம். மனத்தூய்மை யுடையனுதலின், கரும அதிகாரியைக் கருத்தாவாகவுடைய மூன்றாவது குணதீதமென்னுந் தியாகம் ஈண்டு, அர்ச்சுனன் வினு விடயமல்லவாம். இத்தியாகமும் சாதன பல வடிவத்தானே இருவகையாம். பல

இச்சையின்றி யாகவாயிலாய கரும அனுஷ்டானரூப சாத்விகத்தியாகத்தால் மனத்தூய்மையை யடைந்தவனும், ஆன்மஞானேச்சை வடிவ விவிதிஷை யுதிக்கப்பெற்றவனும், ஆன்ம ஞான சாதன பூத சிரவண மனன ரூப வேதாந்த விசாரப்பொருட்டுச் சுவர்க்காதி சர்வபல இச்சையற்றவனும் ஆகிய அதிகாரி மனத்தூய்மையின் பின்னர்ச் செய்த தூய்மையின் சாதன பூதமாகிய சர்வ கரும பரித்தியாகமோ முதற்சாதன ரூப தியாகமெனப் படும். இதனையே பெரியோர் விவிதிஷா சந்யாசமென்பர். இதனை ஸ்ரீ பகவானும் அருளுவர். முன்ஜன்மத்திற் செய்த சிரவணாதி சாதனங்களின் அப்யாசபரிபாகத்தால் இச்சன்மத்தில் ஆதியிலே ஆன்மசாக்ஷாத்கார மடைந்த கிருதகிருத்திய ஞானி தானே செய்த பலேச்சை கரும பரித்தியாகம் இரண்டாவது பல வடிவத்தியாகமாம். இது வித்வத் சந்யாசமெனப் படும். இதனை ஸ்ரீ பகவான் முன்னருளியுள்ளார். திடப்பிரஞ்ஞன் இலக்கணாதிகளாலும் விரிவாயருளினர். ஹே அர்ச்சுன! எதனானே முன் மொழிந்த முறையே தியாகவடிவம் மிகவும் அறியத்தகாததாமோ; நீதியாக தத்துவத்தை யறிய விரும்புகின்றேன் என்பதனானே முன்னதனை யுணர வேண்டினையோ, அதனானே சர்வஞ்ஞராகிய எமதுபதேசத்தானே அத னுண்மை வடிவத்தை நீ துணிதி. ஈண்டு முன்மொழிந்த இரண்டு விளிக ளானே, அருச்சுனன்பால், குல நிமித்தக மேன்மையையும், தன் பௌருட நிமித்தகமேன்மையையும் ஸ்ரீ பகவான் உணர்த்தி யருளியவாறு காணலாம். ஆகவே அவனிடத்தில் தியாகவடிவத்தைத் துணியும் தகுதி குறிப்பித் தருளியவாறும் காணலாம். (தொடரும்.)

சீடன்.

---

## ஓர் முக்கிய அறிவிப்பு.

சந்தாதாரர்களின் விருப்பத்தின்படி நமது "ஆனந்தபோதினி" சஞ்சிகையை 40 பக்கங்களிலிருந்து 48 பக்கங்களாக்கிச் சென்ற மாதம் வெளிப் படுத்தினோம். ஆனால் 4112 சஞ்சிகைகள் ஆதரவின்றித் திருப்பப்பட்டிருக்கின்றன. ஆயினும் அதை நாங்கள் பொருட்படுத்தாமலே இந்த மாதமும் 48 பக்கங்களிலேயே சஞ்சிகையை வெளியிட்டுள்ளோம். அடுத்த மாதம் சஞ்சிகை வெளியாவதற்குள், சந்தாதாரர்கள் அதிகமாகச் சேராவிடினும், திரும்பினவற்றிற்காவது பதிலாகச் சேர்ந்துவிட்டால்மாத்திரம் இந்த அளவிலேயே மாதந்தோறும் சஞ்சிகை வெளியிடப்படும். அங்ஙனமின்றி மேலும் பத்திரிகைகள் திரும்பினாலும், திரும்பினவற்றிற்குப் பதிலாக அவ்வளவு புதிய சந்தாதாரர்கள் சேராவிட்டாலும் அடுத்தமாதத்திலிருந்து பழையபடியே 40 பக்கங்களில் சஞ்சிகையை வெளியிடுவோம். ஆதலின் சந்தாநேயர்கள் இதைக் கவனித்து ஒவ்வொருவரும் புதிய சந்தாதாரரைச் சேர்த்துக்கொடுத்துப் பத்திரிகையை ஆதரிக்கக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

பத்திராதிபர்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(46-ம் பக்கத் தொடர்ச்சி.)

லாயர் தன் கூட்டாளிகளை விளித்து,

"சரி இனி முன்பின் யோசிக்கவேண்டாம்; உண்டில்லை யென்று கூற ஒரு நிமிடமே அவகாசம் கொடுத்துச் சுட்டுவிடுங்கள். இனி யென் கட்டளைக் கெதிர்பார்க்கவேண்டாம்" என்றான்.

ஆனந்தஸிங், "ஓ கடவுளே" யென்று பயத்தால் அலறியவன்போல் சற்று கெட்டியாய்க் கூவினன்.

அவன் குரலின் சத்தம் சரியாய் அடங்குவதற்குள் அந்த அறையின் கதவு திறக்கப்பட்டதும் சுத்த வீரர்கள் போன்ற ஐந்துபேர் கைகளில் பிடித்த துப்பாக்கிகளோடு உள்ளே நுழைந்தார்கள்.

லாயர் ஆனந்தஸிங்கை நோக்கி கலவரத்தோடு "இவர்கள் யார்?" என்றான். ஆனந்தஸிங் புன்னகையோடு,

"யாருமில்லை. நமது சினேகரில் சிலர் தாங்கள் கட்டளையிட்ட துப்பாக்கிச் சுடும் வேடிக்கையைப் பார்க்கவந்தார்கள்" என்றான்.

அவன் அப்படிக் கூறிக்கொண்டிருக்கும்போதே அக்கள்ள உத்தியோகஸ்தர் நால்வர் கரங்களுக்கும் கைவிலங்கு பூட்டப்பட்டது. பிறகு லாயருக்கு விலங்கு பூட்டக் கரங்களைப் பிடித்துக்கொண்டார்கள். லாயர் பாபம் இஞ்சி தின்ற குரங்குபோல் ஆனந்தஸிங்கைப் பார்த்து பல்லையிளித்தான்.

ஆனந்தஸிங் தன் ஆட்களை நோக்கி "இவனுக்கு விலங்கு பூட்டவேண்டாம். இவனை நான் பார்த்துக்கொள்கிறேன். நீங்கள் இவர்களைப் பிடித்துக்கொண்டுபோங்கள்" என்றான்.

மறு நிமிடம் லாயரும் ஆனந்தஸிங்கும் மட்டும் அறையில் உட்கார்ந்தார்கள். கடைசியில் ஆனந்தஸிங் வாய்திறந்து "லாயரே! உன் ஆட்டமெல்லாம் ஆடியாய்விட்டது. கடைசியில் நீயும் நானும் சற்று விவகாரமாய்ப் பேசுவோம்" என்றான்.

லாயர் தாழ்ந்த குரலால் "நீ என்ன குற்றத்திற்காக என்மேல் மோஹு விருந்து வந்தாய்?" என்றான்.

ஆனந்தசிங்:-நான் எல்லாச் சங்கதிகளையும் அறிந்துகொண்டிருக்கிறேன்.
நீ அசசுதன் கொலையில் எவ்வளவுவரையில் சம்பந்தப்பட்டிருக்கிறாய்?

லாயர்:—கடவுளறிய நான் அதில் பிரவேசிக்கவில்லை.

ஆனந்:—பின்னை யெப்படிச் சம்பவித்தது?

லாயர்:—கறுப்பண்ணனும மலையாளியும் சச்சரவு செய்துகொண்டார்கள்.
அதன்மேல் அசசுதன் தன்வரையில் எச்சரிக்கையாயிருந்தான்.

ஆனந்:—அது உத்தேசித்துச் செய்த கொலையோ?

லாயர்:—இல்லை யில்லை. அது தற்காப்பில் நடந்த கொலை.

ஆனந்:—அந்தக் கள்ள மரண சாதனத்தில் நீ சம்பந்தப்பட்டிருக்கிறாயோ?

லாயர்:—கள்ளப்பத்திரமே சிட்சனை செய்யப்படவில்லை.

ஆனந்:—நீ யப்படி அச்சுதன் கொலையிலாவது கள்ளப் பத்திரத்திலாவது சம்பந்தப்படாதவனுயிருப்பது உண்மையாயின், நடந்த சங்கதிகள் யாவும் தாராளமாய்க் கூறிவிடலாம்.

லாயர்:—நீ இப்படிக் கூறுவது எனக்குச் சந்தோஷமே. எனக்குத் தெரிந்த யாவும் நான் கூறிவிடுகிறேன்.

ஆனந்:—மரண சாதனத்தைப்பற்றிய உண்மையென்ன ?

லாயர்:—கடைசியில் இறந்தவன் எழுதிய மரணசாதனத்திற்குப் பதிலாய் பழைய சாதனம் ஒன்றை மாற்றிக்கொண்டார்கள்.

ஆனந்:—புதுச் சாசனம் யாரிடமிருக்கிறது?

லாயர்:—அது இருந்தால் கறுப்பண்ணனிட மிருக்கவேண்டும்.

ஆனந்:—அம்பாலிகை யெங்கிருக்கிறாள் உனக்குத் தெரியுமா?

லாயர்:—அது எனக்குத் தெரியாது.

ஆனந்:—"சரி, இப்போது நான் சொல்வதைக் கவனமாய்க் கேள். நீ அத்துஷ்டர்களுக்கு நடந்த சங்கதிகள் ஒன்றும் கூறாமல் அவர்கள் கட்சியில் நின்றும் விலகிவிட்டால் உனக்கொரு கெடுதியும் இல்லை. அப்படிக்கின்றி அவர்களுக்கு உளவாயிருந்தாலோ நீ யிந்த வுலகில் எங்கு சென்றாலும் உன்னைக் கண்டுபிடித்து அழித்துவிடுவேன்" என்றான்.

லாயர்:—"ஆ! என் தந்திர சாமர்த்தியம் உனக்குத் தெரியுமென்று நினைக்கிறேன். நீ என் கையில் விலங்கு பூட்டவேண்டாமென்று கூறியதற்கு முன்பே நான் பூரணமாய்த் தோலவி யடைந்தேனென்று எனக்குத் தெரியும். அதன்பிறகு எனக்கு என்ன கோபம் இருந்தாலும் நெருப்பையுதைக்க நான் அவ்வளவு மூடனல்ல" என்றான்.

ஆனந்.—நீ யத்துஷ்டரை விட்டு என் வழியில் சேர்ந்துவிட்டால் குறைந்தது இருபத்தையாயிரமாவது கிடைக்கும்.

லாயர்:—ஆகா. அப்படியே செய்கிறேன். நீ அந்தப் பெண்ணைக் கண்டுபிடிக்கவேண்டுமோ?

ஆனந்:—ஆம்.

லாயர்:—என்னால் கூடியவரையில் நான் உதவி செய்கிறேன்.

ஆனந்:—நான் உனக்கு இன்னொரு முக்கியமான எச்சரிக்கை செய்கிறேன். அதாவது நீ அந்தத் துஷ்டர்கள் தப்பித்துக்கொள்ளும்படி ஏதாவது செய்தாயோ, பிறகு நீயே கட்டாயம் இதில் சிக்கிக்கொள்வாய் பத்திரம்.

லாயர்:—நீ யதைப்பற்றிச சற்றும் அஞ்சவேண்டியதில்லை. என்னுள்ளத்தில் அவர்கள்மேல் சற்றேனும் அன்புகிடையாது. என்னைக் காப்பாற்றிக்கொள்வதற்காக நான் அவர்கள்மேல் மோசூல்வைத்துக் கொண்டிருக்கிறேன். அவர்கள் காரியம் பூரணமாய் அனுகூலமாகி முடிந்ததே, அச்சுதனை யொழித்துவிட்டதுபோல் என்னையும் ஒழித்துவிடுவார்களென்று எனக்கு நன்றாய்த் தெரியும்.

ஆனந்:—நான் உன்னை யெப்போது சந்திக்கலாம்?

லாயர்:—ஏதாவது சங்கதியகப்பட்டதே.

ஆனந்:—என்னைவந்து சந்திப்பாயோ?

லாயர்:—நீ துப்பறிவதில் பிரக்யாதிபெற்ற ஆனந்தலிங்தானே?

ஆனந்:—ஆம்.

லாயர்:—சந்தோஷத்தோடு "நானே உன்னைச சந்திக்கிறேன்" என்றான்.

உடனே லாயரிடம் விடைபெற்றுக்கொண்டு ஆனந்தலிங் சென்றான். கால் மணிக்குள் லாயரும் ஆபீசைவிட்டுச் சென்றான். (தொடரும்.)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

மலாய் நாட்டிலுள்ளவர்க்கோர் விஞ்ஞாபனம்.

நம்முடைய ஆனந்தபோதினி ஏஜண்டு S. இராமாநுஜாசாரியர், சென்ற 1925ஞு ஜூலைமீ பினங், சிங்கப்பூர் முதலிய மலாய் நாடுகளில் கொஞ்சக்காலம் சுற்றுப்பிரயாணஞ்செய்து போதினிக்குச் சந்தாதாரர்கள் சேர்க்கவும், நம் பிரசுர புத்தக விற்பனைகளுக்கு ஆர்டர்கள் வாங்கவும் போயிருக்கிறார். முதலில் பினங்கில் இறங்கிப் பின்னர் மற்ற இடங்களுக்குச் செல்வார். ஆதலின், அந்நாடுகளில் ஆங்காங்குள்ள நம் சந்தாநேயர்களும், மற்றைய தமிழபிமானிகளும், நாட்டுக்கோட்டை நகரத்தாராகிய கனவான்களும் அவருக்கு வேண்டிய உதவிசெய்து நம் ஆனந்தபோதினிக்குச் சந்தாதாரராகச் சேர்ந்தும், தங்கள் நேயர்களையும் சேர்த்தும், நம் பிரசுர புத்தகங்களுக்கு ஆர்டர் கொடுத்தும் நமக்கு உற்சாகமூட்டும்படி கேட்டுக்கொள்கிறோம்.

பத்திராதிபர்.

**ஆகாயத்தில் திருமணம்:**—அமெரிக்கா, டெட்ராய்ட் என்னுமிடத்தில் தரையிலிருந்து அரைமைல் உயரத்தில் ஆகாயத்தில் மிஸ்டர் ஹோவர்ட்யன் போட்டர் அவர்களுக்கும் மிஸ் கிளேடிஸ் மேக்பாக்ஸ்டர் அம்மாளுக்கும் விவாகமாயிற்றாம். மணமகன் ஒரு ஆகாய விமானத்திலும் மணமகள் ஒரு ஆகாய விமானத்திலும் பாதிரியாருடன் சென்று நின்று மூவரும் ஒரு விமானத்திலமர்ந்து மண முடித்துக்கொண்டனராம். பந்துக்கள் பூமியிலேயே யிருந்தார்களாம்.

*　　*　　*　　*　　*　　*

**கலியுக விநோதம் :**—கோயமுத்தூர் ஜில்லாவைச்சேர்ந்த எம்மயம்பாள் புரத்தில் 10-வயதுள்ள ஒரு சிறு பெண் வழக்கம்போல் அருகிலிருக்கும் நிலங்களில் ஆடுமாடுகளை மேய்த்துவரச் சென்றவள் ஒருநாள் ஒரு மரத்தடியில் சிலாவிக்கிரகம் ஒன்றைக் கண்டெடுத்து அதனிடத்தில் பக்தி கொண்டு, தினம் அங்குள்ள கிணற்றில் ஜலமெடுத்து நீராடி அவ்விக்கிரகத்தைப் பூசித்து அதனை அங்கேயே வைத்துவிட்டுத் தன் வீட்டுக்குத் திரும்புவாளாம். இப்பெண் சில தினங்களாக வீட்டுக்கு நேரஞ்சென்று திரும்புவதைக்கண்ட பெற்றோர்கள், இவள் செய்கையை அறிந்து அந்த விக்கிரகத்தை எடுத்து அங்குள்ள கிணற்றில் போட்டுவிட்டார்களாம். இந்தப் பெண் உடனே அக்கிணற்றில் குதித்து விக்கிரகத்துடன் வெளியேவந்து முன்போல அதைப் பூசித்து வருகிறாளாம். எத்தகைய வியாதியையும் குணப்படுத்துகிறாளாம். அனேகம்பேர் அந்த விக்கிரகத்தையும் அப்பெண்ணையுங் கண்டு, காணிக்கை செலுத்தி, தங்களுக்குள்ள நோயைத் தீர்த்துக்கொண்டு வருகிறார்களாம். எம்மயம்பாள்புரம், கினது கெடுவு ரயில்வே ஸ்டேஷனுக்கு நாலைந்து மைல் தூரத்திலிருக்கின்றதாம். இந்த விக்கிரகம் அந்தப் பெண்ணுக்கு அகப்பட்டுப் பத்தே மாதங்களாகின்றன.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## குரோதனஹு புரட்டாசிமீ—கலியுகாதி 5027, சாலிவாகனம் 1848, பசலி 1335—கொல்லமாண்டு 1100-1101—ஹிஜரி 1344, இங்கிலீஷ் 1925ஹு செப்டம்பர்மீ—அக்டோபர்மீ

| புரட்டாசி | செப்டம்பர்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | புத | திர1-43 | மகம்38-13 | சி38-13அ | கன்னிரவி நா-3-53,ஷடசீதி புண்ணியகாலம் |
| 2 | 17 | வியா | ச●6-0 | பூரம்43-17 | சி43-17ம | பிதுருமாளயஅமாவாசை |
| 3 | 18 | வெ | அமா9-13 | உத்47-10 | சி47-10அ | ஆலய நவராத்ரி ஆரம்பம் |
| 4 | 19 | சனி | பிர10-58 | அஸ்49-53 | மர60 | நவராத்திரி பூஜாரம்பம் |
| 5 | 20 | ஞா | துதி11-38 | சித்51-25 | சித்60 | தானியம் செலவிட |
| 6 | 21 | திங் | திரி11-10 | சுவா52-5 | அ52-5மர | மாசசதுர்த்தி விரதம் |
| 7 | 22 | செவ் | சது9-45 | விசா51-43 | ம51-43சி | லலிதாபஞ்சமி |
| 8 | 23 | புத | பஞ்7-28 | அனு50-35 | சித்60 | துலாயனம் 33-3, சஷ்டி |
| 9 | 24 | வியா | சஷ்4-23 | கேட்48-40 | பி48-40சி | அவமாகம் |
| 10 | 25 | வெ | சப்0-28 அ55-48 | மூல45-58 | அ45-58பி | சரஸ்வதிஆவாஹனம்,பத்திரகாளி துர்காஷ்டமி |
| 11 | 26 | சனி | நவ50-30 | பூரா42-35 | சித்60 | அஸ்தாகார்த்திகை16-30 ஆயுதபூஜை [ழை |
| 12 | 27 | ஞா | தச44-33 | உத்38-33 | அமி60 | விஜயதசமி, 11-க்குள் ம |
| 13 | 28 | திங் | ஏகா38-3 | திரு34-3 | அ34-3சித் | சர்வ மத்வ ஏகாதசி |
| 14 | 29 | செவ் | து31-23 | அவி29-13 | சி29-13ம | பிரதோஷம் [ண |
| 15 | 30 | புத | திர24-35 | சதை24-25 | சி24-25அ | வியாதியஸ்தர் மருந்துண் |
| 16 | 1 | வியா | ச○18-8 | பூரட்19-48 | சித்60 | கரிநாள், பௌர்ணமீ |
| 17 | 2 | வெ | பௌ12-8 | உத்15-48 | சி15-48அ | வாகனமேற |
| 18 | 3 | சனி | பிர7-20 | ரேவ12-43 | ம12-43சி | அசூன்யசயன விரதம் |
| 19 | 4 | ஞா | துதி3-43 | அஸ்11-3 | சித்60 | வியாதியஸ்தர் மருந்துண் |
| 20 | 5 | திங் | திரி1-40 | பர✡10-55 | சி10-55ம | கிருத்திகை [ண |
| 21 | அக்டோபர்மீ 6 | செவ் | சது1-35 | கிரு12-43 | சி12-43அ | |
| 22 | 7 | புத | பஞ்3-15 | ரோ16-25 | சித்60 | |
| 23 | 8 | வியா | சஷ்6-58 | மிரு21-45 | மர60 | |
| 24 | 9 | வெ | சப்12-10 | திரு28-38 | சித்60 | |
| 25 | 10 | சனி | அ18-20 | புன36-13 | சித்60 | |
| 26 | 11 | ஞா | நவ24-58 | பூச44-5 | சித்60 | |
| 27 | 12 | திங் | தச31-15 | ஆயி51-23 | சி51-23ம | |
| 28 | 13 | செவ் | ஏகா36-38 | மக57-40 | சித்60 | |
| 29 | 14 | புத | துவ40-40 | பூர60 | அமி60 | |
| 30 | 15 | வியா | திர43-13 | பூர2-40 | சித்2-40ம | |
| 31 | 16 | வெ | சது44-13 | உத்6-8 | சி6-8அமி | துலாரவி நா-33-42,தீபாவளி பண்டிகை |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | 2உ கன்-செ | | ரா |
| கே | 10 ,, கன்-புத<br>27 ,, து-புத<br>20 ,, விரு-சுக் | | செ புத |
| குரு | | சனி சுக் | சூரி |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS,